உ

[illegible] துணை.

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவர்

திருவாய்மலர்ந்தருளிய

# பவளக்கொடிமாலை.

இஃது

குயப்பேட்டை,

வீ. இராஜூ முதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

---

மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்

பி. நா. சி. கடைகாரியம்

மு. கிருஷ்ணப்பிள்ளை அவர்களால்

---

பி. நா. சிதம்பரமுதலியார்

பிரதர்ஸ் அவர்களது

சென்னை

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

இதன் விலை] 1925. [அணா-6.

## புனு சுகந்த எண்ணெய்.




இந்த எண்ணெயிலிருக்கும் பரிமள மானது மனோரஞ்சித மலரைப்போல பல வித வாசனையைக்கொடுக்கும். சில வாசனை எண்ணெய்கள் கூந்தலில் தடவிக் கொண்ட சற்றுநேரத்திலேயே மாரிவிடுவதுண்டு. இந்த எண்ணெயை கூந்தலுக்கு தடவிக்கொண்டு உங்கள் வழக்கப்படி எத்தனைநாள் பொறுத்து தலைமுழுகினுலும் இதன் பரிமளத்தைப்பார்க்கலாம்.

ஒரு டப்பியின் விலை ரூபா—1.

## ரிங்வோரங்கியூர் என்னும் படை சங்காரன்.



ஐயா, உம்முடைய தேகத்தில் எந்த பாகத்திலாவது மேகப்படைகள் மேககாரகப்படைகள் அல்லது பெண்களுடைய தேகத்தில் எவ்வித படைகள் இருந்தாலும் எமது (படைசங்காரன்) என்னும் ஔஷதத்தில் போதுமானது எடுத்து படையுள்ளயிடத்தில் தடவி நன்ருய்த்தேய்த்து மூன்றுமணிநேரம் பொருத்து சோப்பு அல்லது சிக்காய் போட்டு தேய்த்து அலம்பிவிடவும். இதுபோல் இரண்டு அல்லது மூன்றுவேளை மேற்சொன்னபடிசெய்தால் நல்ல குணத்தைக் காணலாம். இந்த மருந்திஞல் அனேகர் சுகமடைந்து நற்சாட்சி பத்திரங்களும் அனுப்பியிருக்கிறார்கள்.

ஒரு புட்டியின் விலை ரூபா—1.

எமது கேட்லாக் வேண்டுமானுல் அரையணு ஸ்டாம்பு அனுப்பினுல் அனுப்பப்படும்.

இப்படிக்கு,

பி. நா. லோகநாதமுதலியார் அண்டு கோ,

'நாராயணவிலாஸ்'

பிரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு, மதராஸ்.



உ

கடவுள் துணை.

# பவளக்கொடிமாலை.



காப்பு கலிவிருத்தம்.

வேதமாநெறி சேரும்வினைகளும்
தாகபோக விடாததளர்ச்சியும்
சோகவாரியி னல்வருந்துன்பமும்
போகவானை முகவனைப்போற்றுவாம்.

விநாயகர் தோத்திரம்.

அத்திமுகத்தோனே அரனார்திருமகனே
சத்திக்கணபதியே சரிந்தவயிற்றோனே
காரானைமாமுகனே கணபதியேமுன்னடவாய்
ஸ்ரீராமர்தன்மருகா செல்வக்கணபதியே
பேழைவயிற்றோனே பெருச்சாளிவாகனனே
கந்தருக்குமுன்பிறந்த கற்பகமேமெய்ப்பொருளே
வந்தெனக்குமுன்னடவாய் மாயன்மருகோனே

கலைமகள் துதி.

வாணிசரஸ்வதியே மறையவனார்தேவியரே
சொல்லுவழுவாமல் சொற்குற்றம்வாராமல்
நாவுதவறாமல் நடத்துமம்மாவிக்கதையை
ஐந்தெழுத்தையோரெழுத்தாய் அழுத்துமம்மாவென்னாவில்
எட்டெழுத்தையோரெழுத்தாய் எழுதுமம்மாநாவுதனில்

துரோபதை துதி.

தோருவடிவழகி துரோபதையேபாஞ்சாலி
அக்கினியில்வந்துதித்த ஆதிபராசத்தியரே
நெருப்பில்பிறந்தவளே நீலவர்ணன்தங்கையரே
மந்தாரக்குந்தியற்கு முக்திவந்தமருமகளே
சந்தனவடிவழகன் தருமராசன்தேவியரே
பாடத்தொடங்கினேன் பாஞ்சாலன்சீர்மகளே
உன்கதையைநான்பாட வல்வினைகள்வாராமல்
பவளக்கொடிமாலை பாடத்தொடங்கினேன்பான்
கற்றோர்க்குக்குற்றங்கள் காதுவழிநேர்ந்தாலும்
உற்றபிழைகளெல்லாம் உயர்ந்தோர்மனம்பொறுத்து

இப்புவியோரெல்லோரும் ஒப்பிமனமகிழ
அப்பால்நடந்ததை அடியேனுரைத்திடுவேன்

### அல்லி அரசிருக்கை.

அல்லிப்பெருமாள் அரசாளுநாயகியாள்
ஆறுயிரம்பாண்டியற்கு அரியதுரைமக்களாம்
மதுரைநகருறும் வாழ்பாண்டிநாடுடையாள்
நாலுமலையாளம் நடுவானதென்மதுரை
தென்மதுரையாளுகிற தேன்மொழியாளல்லியம்மாள்
ஆணரசாண்டாலே அழிந்துபோம்சீமையென்று
பெண்ணரசாளவென்று பிறந்தாளே அல்லியிலே
ஒருவர்வயிற்றில்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரில் உள்ளேயாணற்சேருமுண்டு
அடிக்கிறகாற்றதனில் அலைநாற்றுருப்புமுண்டு
காலகாலநாதருக்கு கண்ணுங்கறுப்புமுண்டு
சந்திரற்குமச்சமுண்டு சறமேகருப்புமுண்டு
குன்றுமணிக்காணாலும் கொஞ்சங்கறுப்புமுண்டு
அவள்மயிரேகருப்பொழிய மற்றக்கருப்புமில்லை
புருவங்கருப்பொழிய பின்னேகறுப்புமில்லை
மணலன்விசையனு மடலூர்த்தமாதேவி
காளைவிசையன் கட்டழகிமாதேவி
ஏழுபிராயத்திலே எதிர்த்தவக்தரீன்முகனை
வெட்டிக்கெலித்து வீரபட்டங்கட்டிக்கொண்டாள்
பொம்மைவிருதுகட்டி பூமியெல்லாமாளுகிறள்
அல்லியென்றுபேர்சொன்னால் அழுதபிள்ளைவாய்மூடும்
கொப்பனையாள்பேர்சொன்னாள் குருவிதண்ணீர்குடியாது
கட்டழகிபேர்சொன்னால் கல்லுந்தெய்வங்கூத்தாடும்
அல்லியென்றுபேர்சொன்னால் அறுத்ததலைகொக்கரிக்கும்
கட்டழகியல்லியற்கு காலையிலேதானெழுந்து
முத்துச்சிவிகையது யேறிமுருகுழலாள்
தாதியருந்தோழியருந் தையல்மாரூழ்ந்துவர
பூங்காவனச்சோலை போயிரங்கியல்லியரும்
பாலைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழித்து
பொய்கையிற்போயிரங்கி பொன்முகஞ்சுத்திபண்ணி
முத்துநிகர்த்தபல்லும் முருக்கப்பூசெவ்வாயும்
காலோடுகைகளுங் கனிவாயுஞ்சுத்திபண்ணி
சிவசிவாவென்றசொல்லி திருநீற்றுக்காப்பணிந்து
மதுரைமீனாட்சியவரை மனதிலேதானினைத்து
சொக்கரடிபணிந்து செவிமீதிற்பூச்சொருகி
சந்தனமுப்பன்னீருஞ் சவ்வாதுந்தானணிந்து

பார்ப்பார்பரதேசி பண்டாரஞ்சங்கமற்கு
அந்தணர்வேதியற்கும் அதிதிபரதேசியற்கும்
தானம்வழங்கிவர தாமரைசூழ்வாழ்மாரி
தருமத்தைசெய்தவளும் தண்டிகையின்மீதேறி
பூங்காவனத்தைவிட்டு பொற்கொடியும்வாருளே
ஆனையின்மேல்பேரிகை ஓசைகிளப்புகுது
ஒட்டையின்மேல்பேரிகை ஓசைகிளப்புகுது
பேய்த்தாரையூதிவர பெரியடமாடோலடிக்க
சங்கிதமேளம் சபையில்முழங்கிவர
ஐங்காதவழிதூரம் பேய்த்தாரையூதிவர
நாற்காதவழிதூரம் நாகசுரமூதிவர
முக்காதவழிதூரம் முரசுமுழங்கிவர
தித்திமித்தோமென்று சிறுபெண்களாடிவர
தத்திமித்தோமென்று தாளங்கள்போட்டுவர
கவியர்கவிபாட கட்டியங்களார்பரிக்க
புலவர்புகழ்ந்துவர புட்பங்கள்தூவிவர
நட்டுவர்பாடிவர பாவையர்களாடிவர
ஆடாதகூத்துகளும் அரிசசந்திரநாடகமும்
கேளிக்கைபார்த்துமல்லோ கிளிமொழியாள்வாருளே
தெத்துக்கடந்து தெருவீதிதான்கடந்து
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
அங்காடிவீதிகளும் அரண்மனையுந்தான்கேட்டு
மாடத்தெருகடந்து மண்டபமருகில்வந்து
பல்லக்கைவிட்டிறங்கி பார்மனையினுள்புகுந்து
முத்துமிதியடியைத் தொட்டுமிகநடந்து
மாணிக்கக்கிரீடங்கள் மகுடமுடி துலங்க
தாதியர்கள்சூழ்ந்து தனிக்கவரிவீசிவர
மாதர்புடைசூழ மண்டபஞ்சென்றேறினள்
ஓராம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம்
இரண்டாம்படித்தளமாம் இரத்தினகிரிமேடைகளாம்
மூன்றாம்படித்தளமாம் முத்துச்செம்பொன்படிவாசல்
நான்காம்படித்தளமாம் நாகரத்னமண்டபமாம்
ஐந்தாம்படித்தளமாம் அரக்குமணிமேடைகளாம்
ஆறாம்படித்தளமாம் அழகானமேடைகளாம்
ஏழாம்படித்தளமாம் எழிலானமண்டபமாம்
எட்டாம்படித்தளமாம் எண்ணெய்க்கால்மண்டபமாம்
ஒன்பதாம்படித்தளமாம் ஓலைப்பூச்சாவடியாம்
பத்தாம்படித்தளமாம் பளிங்குமாமண்டபமாம்
ஆயிரக்கால்மண்டபத்தில் அல்லியரும்வந்தமர்ந்தாள்
பொன்னுமலைநாடாளும் போகவதிவந்தமர்ந்தாள்
பன்னிரண்டுமந்திரியும் படைத்தலைவர்வந்தமர்ந்தார்

மந்திரிபிரதானிகளும் மற்றுமுள்ளராசாக்கள்
முந்நூறுகோடி முடிமன்னர்வந்தமர்ந்தார்
காநூறுகோடி நகரத்தார்வந்தமர்ந்தார்
முடியோடுமுடிநெருங்கும் குருகுழலாளம்பலத்தில்
சட்டையோடுசட்டை நெருக்குஞ்சபைதனிலே
அமராதரும்சமராதரும் ஆஸ்தானமரகதரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியர்மராட்டியரும்
நிறைந்தகொலுவாயிருக்கும் நேரிழையாளம்பலத்தில்
அப்பெரியசபைதனிலே அல்லியவள்கொலுவிருக்க
காணவருவாரும் கைகட்டிநிற்பாரும்
பார்க்கவருவாரும் பாண்டிப்பெருமாளை
தூரத்துராசாக்கள் சுருளோலைகொண்டுவந்தார்
காதத்துராசாக்கள் கைவோலைகொண்டுவந்தார்
செம்பொன்னும்பூட்டிவருந் தீவுகிளிப்பிள்ளைவரும்
இந்தவிதமாக யிருக்கின்றவேளையிலே

## புலந்திரன் விளையாடல்.

அந்தச்சமயத்தில் அழகுபுலந்திரனும்
செண்டுமறவனுஞ் சினேகிதனைப்பிரியானும்
கோட்டைமறவானும் கூட்டாளிபிரியானும்
தாயாரைச்சுற்றிவந்து தயிருக்கழுவானும்
பாதத்தைச்சுற்றிவந்து பாலுக்கழுவானும்
விளையாடிவீட்டில்வந்து வெண்ணைக்கழுவானும்
வர்மைமுகந்தாக்கால் முலைப்பால்கவுச்சடிக்கும்
வீதிவிலாசமதாய் விளையாடும்வேந்தனவன்
தங்கத்தேரோட்டி தனஞ்செயனார்வீதியெல்லாம்
செம்பொன்தேரோட்டி திகழ்வேந்தர்வீதியெல்லாம்
மாணிக்கத்தேரோட்டி மன்னர்தெருவீதியெல்லாம்
முத்துத்தேரோட்டியே முடிமன்னர்வீதியெல்லாம்
வசந்தமணிமண்டபத்தில் வழியேவரும்போது
பஞ்சவர்ணக்கிளிகளைக் கண்டந்தபாண்டியனும்
இப்படிக்கொத்ததேர் இயற்றவென்றுபுலந்திரனும்
தாயார்கொலுவிற்கு வந்தான்புலந்திரனும்
தண்டையசைய சதங்கைகலகலென
அறைவடமுங்கிண்கிணியு மறையில்கிழல்காட்ட
கண்டசரமும் கனவயிரத்தாழ்வடமும்
மார்பில்பதக்கமின்ன வச்சிரக்கபாய்கள்மின்ன
வட்டமிட்டநெற்றியிலே வயிரமுடிதுலங்க
பட்டுதெட்டிஒட்டியாணம் பசும்பொன்னல்சமுதாடு
கட்டுபுராண்டாட்க் கட்டழகன்வாருனும்
சிறுகால்மிதியடியாம் சிங்காணிவில்லழகாம்

பக்கமிருபுரமும் பரிசுபிடித்துவர
கட்டழகன்பின்னாக கத்திசுழட்டிவர
ஈட்டிபிடித்தவர்கள் இருபுறமுஞ்சூழ்ந்துவர
தாயார்கொலுச்சபையில் தார்வேந்தன்வந்துநின்றான்
வந்துநின்றதன்மகனைக் கண்டந்தவாழ்மாரி
அப்பாவருக அழகானகண்மணியே
பிள்ளைகலிதீர்த்தவனே பெருமாளேவாருமென்றாள்
கண்மூன்றுடைய கைலாசநாதனே
அண்டத்துசந்திரனே அருகிருக்கும்பாற்குடமே
சொக்கர்திருமாளிகைக்கு தூண்டாமணிவிளக்கே
வைகைகரைதனக்கு மண்சுமந்தசொக்கரே
கப்பலுஞ்சோங்கும் கரைதுறையுமுள்ளவனே
சங்கீன்றமுத்தே சலாபமுடையவனே
ஆயிரம்பாண்டியற்கு அழகர்ன்பேரனையோ
வாராய்மகனேயென்று வாரிமடியில்வைத்து
ஏந்திமடியில்வைத்தாள் இருகொங்கைபாலொழுக
சட்டையைநீக்கியே சரீரமெல்லாமுத்தமிட்டாள்
உச்சிமுகந்தாளே உள்ளங்கால்முத்தமிட்டு
மைந்தன்புலந்திரனை மடிமேலேவைத்திருந்தாள்
என்னவேணுமென்மகனே எனக்குரியக்கூறுமென்றாள்

புலந்திரன் தாயாரைப் பவளத்தேர்கேட்டது

எண்ணிப்புலந்திரனும் ஏங்கிவுரைக்கலுற்றான்
தாயார்முகம்பார்த்து தார்வேந்தனேதுரைப்பான்
உலநாதியார்கையினால் உன்மைந்தனானபடி
மதுராபுரிதுரையாள் உன்மைந்தனானபடி
நானேநிவிளையாட யியலானதங்காதம்
தங்கத்தேர்தந்தாரே தனஞ்செயனென்பாட்டன்
மாணிக்கத்தேர்தந்தாரே மன்னர்துரைராசாக்கள்
சித்திரவீதிகளும் சிறப்பானதோப்புகளும்
மட்டில்லாவீதியது மதுரைப்பெருந்தெருவில்
செம்பொன்தேர்தந்தாரே திகழ்வேந்தரென்பாட்டன்
வாழ்பாண்டிநாடும் மதுரையுஞ்சுற்றிவர
பாண்டிப்பெருமானே பவளத்தேர்வேண்டுமம்மா
போசனங்கள்வேண்டாமென்று பிணங்கினனிந்திரனும்
மைந்தனுரைத்ததனை கேட்டந்தவாழ்மாரி
கேளாக்கருமத்தை கேட்டாயேகண்மணியே
தங்கத்தேர்வேண்டிக் கேளாமல்கண்மணியே
முத்துத்தேர்வேண்டி முடிமன்னர்கேளாமல்
மாணிக்கத்தேர்வேண்டி மைந்தனேகேளாமல்
என்னுடையராச்சியத்தில் இல்லையேபவளமது

இல்லாக்கருமத்தை கேட்டீர்புலந்திரனே
என்று-உற்றநினைந்தானே ஒருகோடிபுத்திகளே
மைந்தனவன்கேட்டது மனதுதுயரமதாய்
அப்பெரியசபைதனிலே அனந்தமானராசர்முன்னே
ஆயிரம்பாண்டியர்கள் ஐயன்மார்சபைதனிலே
வேந்தர்சபைதனிலே மெல்லியருமேதுரைப்பாள்
என்னுடையகொலுவிலே யிருக்கின்றராசர்களே
மந்திரிபிரதானிகளே வாய்மொழியைக்கேளுமென்றாள்
பாலன்புலந்திரற்குப் பவளத்தேர்வேண்டுமம்மா
அறிந்தாலுரையுங்கள் அழகானராசர்களே
இவ்வார்த்தைகேட்டு யேதுரைப்பார்மந்திரிகள்
இங்கேகிடையாது இயலானநற்பவளம்
வடக்கேவெகுதூரம் வண்மைதீவாந்தரத்தில்
தீவாந்தரக்காட்டில் செம்பவளம்விளைகிறது
பன்னிருநாதவழி பவளம்விளைகிறது
அங்கேயிருக்குதம்மா அழகானநற்பவளம்
கொண்டுவருவாருண்டானால் கொப்பெனவேசீரனுப்பும்
என்றதுகேட்டு யேதுரைப்பாள்வாழ்மாரி
என்னுடையசபைதனிலே யிருக்கிறராசர்களே
தீவாந்தரத்துக்குப் போறதுரைகளுண்டோ
போறதுரைகளுண்டோ புறப்படுங்களிச்சபையில்
தாம்பூலம்வாங்குங்கள் சமர்த்துள்ளராசர்களே
கத்திகட்டும்ராசாக்கள் கனத்ததுரைகளுண்டோ
மீசையுள்ளராசாக்கள் வெளிப்பட்டுவாருங்களென்றாள்
நாடுதருவேன் ராச்சியம்நான் தருவேன்
பூமிதருவேன் புதுப்பட்டங்கட்டிவைப்பேன்
என்னைப்போல்ராசாவாய் இனிப்பட்டங்கட்டிவைப்பேன்
வல்லமையுண்டானால் வாங்குங்கள் தாம்பூலம்
என்றதுகேட்டவுடன் இயலானமந்திரிகள்
பட்டத்துமந்திரிகள் பார்வேந்தரேதுரைப்பார்
மதுரைப்படைத்தலைவர் மந்திரிகளேதுரைப்பார்
அல்லிப்பெருமானே ஆச்சியரேநீர்கேளும்
பிறந்தோம்மதுரையிலே வளர்ந்தோம்மதுரையிலே
மதுரைக்குஅப்பாலே வனமொன்றுநாமறியோம்
அறிந்துபோய்சொன்னாலே ஆக்கினைகள்செய்திடுவாய்
உன்-ஆக்கினைக்குத்தான்பயந்து ஆச்சியரேபோனாலும்
பவளம்விளைகின்ற பலமான அக்காட்டில்
ஆனைத்தலையை அறியுந்தண்டுகளும்
சிங்கத்தலைபோ யிருக்குமாஞ்செங்குளவி

குதிரைத்தலைபோ லிருக்குமாங்கருங்குளவி
காதிலேகேட்டதுண்டு கண்ணினாலகண்டதில்லை
தீவுக்குப்போனவர்கள் திரும்பிவந்துசேர்ந்ததில்லை
என்றதுகேட்டிருப்போம் இனியோன் றநாமறியோம்
எங்களால்முடியாது என்றார்கள்மந்திரிகள்
இன்னமொருவார்த்தை ஆச்சியரேநீர்கேளும்
அருச்சுனரைத்தானழைத்தால் ஆகுமிந்தக்காரியங்கள்
அவரைப்போல்சேவகர் ஆருமொருவரில்லை
சீமைசீமைதேசமெல்லாம் திரிந்துவந்ததேர்விசயன்
எந்தெந்தராசாக்கள் எதிர்ப்பாரொருவரில்லை
அவருக்குமிஞ்சினவ ராண்மையுள்ளாராருமில்லை
ராசாக்களானாலும் ராட்சதர்களானாலும்
எதிர்த்துவந்தபேர்களை இருதுண்டாய்ப்போட்டிடுவார்
அவரையழைத்தீரே அனுகூலம்பண்ணாலே
மைந்தனுக்குப்பவளத்தேர் வந்துவிடுமப்போது
மற்றொருவர் தன்னாலே யாகாதுமாதாவே
என்றதுகேட்டாளாம் எரிபறந்துகண்சிவந்து
பிவாமுடிதரித்த பெண்பெருமாள்கோபமானாள்
ஆறாதகோபமது ஆனது அல்லியற்கு
கொல்லுங்குருவியைப்போல் கோபித்துக்கண்சிவந்து
மந்திரிகளானையினால் மனம்பொருத்தேனிப்போது
மற்றொருவரானாக்கால் வயிரமுடிகொய்திடுவேன்
தனிப்பட்டங்கட்டியே தனி அரசு ஆண்டேனே
பெண்பட்டங்கட்டியே பூமியரசாண்டேனே
மானூர்க்தளன்னை மாலையிட்டார்வாள்விசையன்
மன்னன் புலந்திரனார் பிறந்தபிறகாக
அப்போதுவாள்விசைய னர்ச்சுனனாரிங்கேவந்தார்
எங்குவந்தீரென்றுநான் கேட்டேனேயப்போது
அதுவேயொருகுற்றமதாய் ஆயாசப்பட்டவரும்
என்னைக்-கூப்பிட்டுப்போனாரே குலவிசயனருச்சுனரும்
மைந்தன்பிறந்து வயதுமேழுநாச்சு
இத்தனைநாள்வரைக்கும் இங்கேவந்தாராருமில்லை
வாராத அருச்சுனரை வணங்குவேனோமந்திரியே
நாடாளும்ராசாத்தி நானோவணங்குவது
என்றதுதான்கேட்டு எதுரைப்பார்மந்திரிகள்
புருஷனுக்கும்தேவியற்கும் பெரும்பகைகளுண்டாமோ
அரிசிகுறைவுமில்லை ஆளன்பகையுமில்லை
வரிசையுடன்வணங்கி வரவழைத்தீரானால்
கணவனுக்குவணங்கினால் கனமோசமொன்றுமில்லை
இதனாற்பழுதுமில்லை என்றார்கள்மந்திரிகள்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியருமேதுரைப்பாள்

ஐந்துவருஷமாய் அவரைமறந்திருந்தேன்
மறந்திருந்த அர்ச்சுனரை வரவழைத்தேனானாலே
மோகத்தினாலே வரவழைத்தேனென்பார்கள்
ஊரிலேயுள்ளவர்கள் உலகாண்டராசாக்கள்
நாட்டிலேயுள்ளவர்கள் நகைப்பார்களிப்போது
கண்டார்சிரிப்பார்கள் கலியுகத்தாரேசுவார்கள்
பார்த்தார்நகைப்பார்கள் பார்லோகமேசுவார்கள்
எப்படியழைப்பிப்பேன் இயலான அர்ச்சுனரை
என்றதுகேட்டவுடன் மந்திரிகளேதுசொல்வார்
தந்தார்பெருமை யுண்டானால்தார்குழலே
பெற்றார்பெருமை யுண்டானால்மாதாவே
வளர்த்தார்பெருமை உண்டானால்தாயாரே
கொண்டார்பெருமை வேண்டாமோகொம்பனையே
கணவன்பெருமை வேண்டாமோகாரிகையே
ஆளன்பெருமையது வேண்டாமோ ஆரணங்கே
ஆனை குதிரைகளை அரண்மனையில்கட்டிவைத்து
குதிரைகளைக்கட்டியே கோடித்துவாழ்ந்தாலும்
ஆளானிருந்து ஆளாதரசுமுண்டோ
புருஷனுமில்லாப் பெருமைகள்செய்வாரோ
காவலர்கள்கோவிலிலே கைபெண்டிரென்பார்கள்
மன்னவாகோவிலிலே வாழாப்பெண்டென்பார்கள்
கொண்டார்பெருமை வேண்டாமோபொற்கொடியே
புருஷன்பெருமை வேண்டாமோபொற்கொடியே
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
வம்பரவரர்ச்சுனர்க்கு விண்ணப்பஞ்செய்ததில்லை
மகாராசர்தருமருக்கு விண்ணப்பஞ்செய்வேனான்
ஆடாதூதுவரே அழையுங்கள்கணக்கர்களை
நாட்டுக்கணக்கெழுதும் நலமானமந்திரிகள்
சீமைக்கணக்குகள் தெரிந்தெழுதும்மந்திரிகள்
கோட்டைக்கணக்குகள் குறித்தெழுதும்மந்திரிகள்
ஊர்கணக்கப்பிள்ளைகளை ஓடியழையுமென்றாள்
அவ்வார்த்தைகேட்டுமந்த ஆங்கார தூதுவர்கள்
ஓட்டமுநடையுமாக ஓடிவந்தார்தூதுவர்கள்
கருணீகரானவரைக் கணக்கெழுதும்மந்திரிகள்
அல்லிப்பெருமானும் அழைத்துவரச்சொன்னாளே
அவ்வார்த்தைகேட்டவுட னன்பாகக்கணக்கரெல்லாம்
கடுகப்பயந்தார்கள் கணக்குச்சுமையெடுத்தார்
எக்கிலெழுத்தாணி இடதுகையில்சுருளோலை
வண்ணக்குறுத்தோலை வரிசையுடன்கைபிடித்து
உச்சகொண்டைபோட்டார்கள் உதறிகடந்தார்கள்
சிங்காதனத்துக்கு முன்னாவந்துநின்று

அல்லிப்பெருமாட்டு அடிபணிந்துதெண்டனிட்டார்
வந்தக்கணக்கருக்கு வட்டமணை போட்டார்கள்
மணிதடுக்குப்போட்டார்கள் வந்திருங்களப்பாவென்றாள்
தர்மாபுரமாளும் தர்மலிங்கராயருக்கும்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அத்தையார்குந்தியற்கும்
வண்ணமிட்டஓலையிலே வக்கணையாயெழுதவேணும்
என்னவென்றுவோலையிலே எழுதுகிறீரானாலே
சோலைமருதுடைய சொக்கர்திருவருளால்
ஸ்ரீரங்கநாதர் திருமால்கிருபையினால்
மதுரைமீனாட்சியம்மை மாதாகிருபையினால்
அல்லியின்மேலே ஆரணங்குபெண்பிறந்தேன்
பெண்ணாய்ப்பிறந்து பெருமாள்முடிசூட்டி
அன்னம்போல்மண்ணாண்டேன் ஐம்பத்தாறுகாதவழி
தர்மர்திருவுளத்தால் தரணிபதியாண்டிருந்தேன்
இன்னாள்வரைக்கும் ஏதுகுறையில்லாமல்
வையகத்தையாண்டிருந்தேன் மனக்குறைகளில்லாமல்
உங்கள்-செல்வக்குழந்தையது தேவேந்திரன்போன்
ஐய்துபிராயமையா அழகாய்வளர்ந்தபிள்ளை
செண்டடித்துப்பந்தடித்து தெருவில்விளையாடி
பொன்னின்தேரோட்டியே போதவிளையாடி
தங்கத்தேரோட்டியே தனித்துவிளையாடி
வெம்பலாய்க்காய்ந்து விழுந்துபடுக்கையிட்டான்
பல்லைக்கடிக்கிறதும் பதறிவாய்ப்பினத்துறதும்
தலையைப்புரட்டுறதுந் தாகமெடுக்கிறதும்
நாக்கைவரட்டுறதும் நயனங்கள்சோர்கிறதும்
பார்த்தபரிகாரி பண்டிதர்பணிக்கர்களும்
தோஷித்துபோச்சதென்று சொன்னார்களென்தனுக்கு
கைதப்பிக்காதென்று கற்பித்தாரென்னோடே
என்னமோஏதோவென் றிருக்குதனென்மனதில்
பொய்சொன்னேனென்று எண்ணாதீர்புண்ணியரே
ஓலைகண்டநாழிகைக்கு வரவேணுமுத்தமனே
கண்ணாலேபார்க்குகைக்கு கடுகெனவேவந்திடுங்கள்
என்றதுசொல்லியே எழுதுங்களோலையென்றாள்
சீர்கணக்கப்பிள்ளைகளும் சொல்வசனந்தான்கேட்டு
சேமக்குருத்தோலை சிக்கெனவேதால்வாரி
அல்லியம்மாள்சொற்படிக்கு அவ்வோலைதானெழுதி
ஓலைச்சுருள்மடித்து செந்திரிக்கைதான்போட்டார்
சீக்காய்நல்லமுத்திரை திருவகுப்பின்மேல்போட்டார்
அவ்வோலைதானெடுத்து ஆனந்தவாழ்மாரி
காத்திலதிகமுள்ள கடுக்காதரையழைத்து
நாழிகைக்குகாதவழி நடந்தோடுங்காதவரே

தருமருக்குகொண்டுபோய் கொடுமென்றாள்தையலரும்
மலையோடேதலைகொடுக்கு மன்னனெழுந்திருந்து
ஓலைச்சுருள்வாங்கி வேவங்கிடக்கலுற்றான்
மதுரைத்தெருகடந்து வைகைக்கரைகடந்து
காடுகடந்து கரியமலைதான்கடந்து
சில்லென்றுபூத்த செடியும்வனங்கடந்து
புல்லென்றுபூத்த புளியின்வனங்கடந்து
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனங்கடந்து
பாதிரிமுல்லை பருத்தவனங்கடந்து
தருமாபுரமருகில் தான்வாறான்தூதுவனும்
பத்தாம்படியில் பவழக்கால்மண்டபத்தில்
தருமரிடகொலுவுக்குத் தான்வந்துநின்றவனும்
ஓலைச்சுருள்வைத்து உத்தமனுக்தெண்டனிட்டான்
ஆர்பணிதூதாநீ அறியவுரையுமென்றார்
மதுராபுரியாளும் வாழ்வரசியல்லியம்மாள்
அவள்பணியென்றுசொல்லி அடிவணங்கிதெண்டனிட்டான்
ஓலைச்சுருள்விரித்தார் உத்தமனார்தருமலிங்கம்
அதிலிருக்கும்மர்மமெல்லாந் தருமலிங்கந்தானறிந்தார்
நம்மைமதித்தாளே நாடாளும்ராசாத்தி
ஐயோமகனேயென்று அழுதுபுலம்புகிறார்
சிவசிவாவென்றுசொல்லி சோர்ந்துமேதான்விழுந்தார்
அம்பிவயிற்றிலே பிறந்ததனஞ்செயனே
மதுரைநகராளுகைக்கு மைந்தனென்றுநானிருந்தேன்
தீர்ந்துதோஉன்னாசை சிவலோகம்போனாயோ
சொக்கரிடமாதஞ் சேருகைக்குநாளாச்சே
ஐக்கியமாய்ப்போகவே ஆச்சுதோஉன்சீவன்
பொன்னுமணியே புலந்திரராசாவே
அல்லிமகனே அழகுபுலந்திரனே
கட்டிமகனே கயிலாயம்போனாயோ
பொன்னுங்குடமேநீ புஷ்பகமேபோனாயோ
கோவென்றசத்தமுடன் குமுறிப்புலம்பலுற்றார்
வெற்றிமதயானை வீமனவன்கேட்டு
தானுமழுதானே தருமருடனாக
நகுலசகாதேவ ராசர்புலம்பலுற்றார்
மந்தாரக்குந்தியரும் மாதாவும்புலம்பலுற்றார்
சந்தோதியாள்கூடத் தானும்புலம்பலுற்றார்
அந்தநகரும்நாடும் அரசுந்தளும்பினது
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
வில்லாளிபார்த்தன் விசையனெங்கேசென்றானோ
அர்ச்சுனனைக்கண்டுநான் ஐந்தாறுநாளாச்சே
எங்கேயிருப்பிடமோ ஒன்றுமறியோமே

ஆடாதூதுவரே அழையுங்கள்தோட்டிதன்னை
தமுக்கடிக்குந்தோட்டியைத் தானழைத்வாருமென்றார்
என்றுசொல்லத்தான்கேட்டு எழுந்தோடி தூதுவர்கள்
பறையறையும்சாம்புவனை பார்த்தழைத்துவாருமென்றார்
தருமராண்டைவந்தவனும சாஷ்டாங்கதெண்டனிட்டான்
என்னையழைத்தது ஏது கருமமென்றான்
அப்போது தருமலிங்கம் ஆணழகரேதுசொல்வார்
பாராளுந்தருமருக்கு பாக்கதுசொக்கிற்றென்று
மெத்தவேபல்லிகை காணாதவேந்தனுக்கு
விசயப்பெருமாளை முகத்தில்விழிக்கவென்று
களைதாங்கிப்போச்சுது கட்டழகர் தருமருக்கு
விஜயப்பெருமாளை வைத்திருந்தால்விட்டிடுங்கள்
என்று-தருமாபுரமெல்லாம் தமுக்கடித்துவாருமென்றார்
வீதிபதினாயிரம் வீரமுரசடியுமென்றார்
இவ்வார்த்தைகேட்டவனும் எழுந்தானேசாம்புவனும்
ஆனையேறிமாலைசூடி அடித்தான்பறையோசை
தருமாபுரிவீதியெல்லாந் தமுக்கடித்துவாரானும்
என்னசொல்லி தமுக்கடித்தான் இயலானசாம்புவனும்
பாராளுந்தருமருக்குப் பாக்கதுசொக்கிற்றென்று
களைதாங்கிப்போச்சுது கட்டழகர் தருமருக்கு
பேச்சுமூச்சில்லாமல் பிணம்போல்விழுந்துவிட்டார்
அனைவோருமங்கே அழுதுபுலம்புகிறார்
அர்ச்சுனராசாவை யாரவைத்திருந்தாலும்
கண்டவர்கள் விட்டிடுங்கள் டுகியனுப்பிடுங்கள்
என்றுஅடித்தானே இயலானதமுக்கோசை
சொல்லியடித்தானே தேர்விஜயன் தான்கேட்க
தேவதாசிதெருவுகளுந் தெருவுபதினாயிரமும்
அத்தெருவுபெண்களெல்லாம் அனைவோருமேது சொல்வார்
காளையருச்சுனரைக் கணாலேகண்டதில்லை
எங்களிடவீதியிலே எழில்விசையன்வாரதில்லை
மாதுசுபத்திரையாள் மச்சினியாள்வீதியிலே
அங்கேயிருப்பார்காண் அருச்சுனவீரியனார்
அவர்சத்துருவேயென்று சாமத்திற்கண்டதுண்டு
உத்தமனேயென்றுசொல்லி ஓமத்திற்கண்டதுண்டு
ஓமப்புகையிலேதான் உடனிருந்தபாவமுண்டு
தாகத்துதண்ணீர்க்கு கையேந்திநின்றதுண்டு
அம்மிமிதித்ததுண்டு அருந்ததிபார்த்ததுண்டு
ஆளானவனென்று அனைவோரும்சொல்லுவார்கள்
இவ்விடம்வாரூரோ எழில்விசையருச்சுனரும்
இடச்சியுடமாளிகையில் இருப்பார்வெறுக்காமல்
அவன்-அந்தத்தெருகடந்து அப்பாலேபோகலுற்றார்

சுபத்திரையாள்வீதியிலே தடுப்போசைமுழக்கிவைத்தான்
தருமருக்குவந்ததொரு தாழ்வெல்லாஞ்சொல்லலுற்றான்
அடித்ததமுக்கோசை அருச்சுனருங்கேட்டுவிட்டார்
தேர்விசையன்கோமானுந் திடுக்கிட்டுத்தானெழுந்தார்
பஞ்சணைவிட்டுமவன் பதறியெழுந்திருந்தார்
சுபத்திரையாள்கண்ணை விழித்தவளுமேதுசொல்வாள்
ஆர்வாசல்செல்ல எழுந்தீர்காணுமழகா
எவள்வாசல்செல்ல எழுந்தீர்காணெழில்விசையா
தீயிற்பிறந்தவளை சிந்தையில்நினைத்தீரோ
மின்னொளியாள்வாசலுக்கு மேவநினைத்தீரோ
நாககன்னிவாசலுக்குப் போகநினைத்தீரோ
மதுரைதுரையல்லியரை மனதில்நினைத்தீரோ
மற்றொருவரைசிந்தையில் நினைத்தீரோ
ஆர்மேலேயாசைகொண்டு ஆணழகாநீயெழுந்தாய்
என்றவள்கேட்டவுடன் எழில்விசையனேதுசொல்வான்
அல்லகாண்பெண்ணரசே ஆரணங்கேநீகேளாய்.
பாராளுந்தருமருக்கு பாக்கதுசொக்கினதாம்
மெத்தவும்பல்லிக்கை தோணுதாம்வேர்தருக்கு
அதியினைப்பாயிருக்குது தாமமுடிமன்னனுக்கு
முகத்தில்விழிக்கவென்னை மொய்குழலேதேடுகிறார்
அது-என்னகருமமென்று அறிந்தோடிநான்வாறேன்
சித்தாயன்தங்கையவள் சுபத்திரையாளேதுசொல்வாள்
தருமராதுவாசலல்லால் தையல்மார்வீடுசென்றால்
மற்றொருத்திவீடுநீ சென்றாலேவாள்விசையா
நீ-உண்ணும்போதேயல்லாமல் உண்ணேன்நான்பாலமிர்தம்
நீ-திருந்தியபோதேயல்லால் தின்னேன்நானடைக்காயும்
என்றதுதான்கேட்டு எழில்விசையனேதுசொல்வான்
உன்னைத்தனியாய்விட்டு உலகளந்தான்தங்கையரே
இன்னொருத்திவாசலுக்குப் போறேனென்றெண்ணாதே
அண்ணனைத்தான்பார்த்து அரைட்சணத்தில்வாரேண்டி
பாலடிசிலுண்டுநீ பாக்காயமுதுசெய்து
பாயசங்களுண்டு மகிழ் திருங்காணமங்கையரே
வாடாதேநீயிருங்காண் மாதரிளங்கொடியே
போகச்சிலவருளும் போய்வாரேன்பெண்ணேயென்றார்
தளராதசேவைதர வேண்டியதுதையலரே
தாழாமேயிருந்து சற்றேசெலவருளும்
மாதுசுபத்திரையாள் வாய்திறந்தேதுரைப்பாள்
ஆகிலும்உம்மைநான் அடையாளஞ்செய்திடுவேன்
அடையாளங்குறையாமல் அர்ச்சுனரேவாருமென்றாள்
வைத்தஅடையாளம் மாறாமல்வாருமென்றாள்
சந்தனமுங்குங்குமமுஞ் சவ்வாதுதான்குழைத்து

அர்ச்சுனன்மார்மேலே அள்ளியறைந்தானே
சந்தனத்தாலே சதுராய்ப்படமெழுதி
குங்குமத்தாலே குறிப்பாய்ப்படமெழுதி
முத்திரைமோதிரத்தால் முன்மார்பில்குறியும்வைத்தாள்
மாதரிடவாசனுக்கு மயிலணையேபோனுக்கால்
உன்-குறிவந்துகூப்பிடுமோ கோம்பேரிடையாளே
உன்-ஆணைவந்துகூப்பிடுமோ ஆனந்தவாழ்மாரி
இருமிருமென்றுசொல்லி எழில்விசையன்போய்நடந்தார்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குத்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கியிடுங்கால்களுக்கு தத்திப்பூச்சல்லடமாம்
சந்திரகாந்திதட்டிகட்டித் தாமரைப்பூச்சுங்குவிட்டு
சிங்காணிவில்லெடுத்து தேர்விசையனபோய்நடந்தார்
பொன்னிழைத்தபட்டாடை பூமியிற்புரண்டழுவார்
பூங்காவனம்புகுந்து புட்பமலரெடுத்து
தருமரைப்பூசைபண்ணச் சம்பங்கிப்பூபறித்து
வாய்வேகமாகவே வந்துவிட்டான் அர்ச்சுனனும்
வீதியும்வீதி தெருவுமவர்தாண்டி
தருமரிருக்கின்ற சாதிலிங்கமேடையிலே
சாந்தணிந்தமேடையிலே தருமரைத்தான்பார்த்து
தருமரிடபாதத்தில் சாஷ்டாங்கதெண்டனிட்டு
கொண்டுவந்தபூமலரைக் குபுகுபென்றுதான்போட்டு
அண்ணாசரணமென்றடிபணிந்துதெண்டனிட்டான்
கைகட்டிநின்றானே கட்டழகன் அர்ச்சுனரும்
வந்துபணிந்தவனை வாழ்த்தியெடுத்தணைத்து
வாழ்வாய்வளர்ந்திடுவாய் வையகத்தையாண்டிடுவாய்
நிற்பாய்நிலைதரிப்பாய் நிலைபராசாண்டிடுவாய்
கற்பதித்ததூண்போலே கலங்காமலரசாள்வாய்
பதினாறுகலையுடைய பார்த்தீபாநீகேளாய்
மதுராபுரித்துரையாள் வாழ்வரசியல்லிமகன்
பார்த்தீபாஉன்மகன்தான் பாலன்புலந்திரனும்
செண்டடித்துப்பந்தடித்துத் தெருவில்விளையாடி
கோட்டிவிளையாடி வீட்டில்வந்தபாலகன்தான்
களைத்தாற்போல்விழுந்தானும் காளைபுலந்திரனும்
காய்ச்சலாகாய்கிறதும் கண்ணைச்சொரிகிறதும்
வெம்பலாய்க்காய்கிறதும் மெத்தவாய்ப்பினத்தாதும்
நயனங்கள்பஞ்சடைந்து நாக்கைவரட்டுறதும்
தோஷித்துபோனதாய் தோணுதாமைந்தனுக்கு
பண்டிதர்பணிக்கர்களும் பார்த்தவயித்தியரும்
கைவிட்டுப்போனாரால் கட்டழகாஉன்மகனை

முகத்தில்விழிக்கவென்று முடிபுனைந்தராசாத்தி
ஓலையெழுதியே வரவிட்டாருத்தமனே
சேதிசமாச்சாரம் சுருளோலைவந்திருக்க
போகாதிருந்தாக்கால் பிழைவந்துசேர்ந்துவிடும்
ஆகையினால்தம்பியரே அருச்சுனரேபோய்வாரும்
அச்சுதானந்தரை ஐயரைக்கூட்டிப்போம்
அவள்-ஆங்காரக்கண்ணியென்று அறிவோமவள்குணத்தை
மண்ணாளும்ராசாத்தி வலக்காரமுள்ளவள்காண்
அவள்-வார்த்தைக்குவார்த்தை மறுவார்த்தைபேசாதே
மைந்தன்புலந்திரற்கு பல்லிக்கைதீரளவும்
உடம்புதெளிந்து உலாவித்திரியளவும்
வாழ்மதுரைராச்சியத்தில் மன்னுதனித்திருந்து
மைந்தன்புலந்திரனை மன்னவரவழைத்து
குமாரனைக்கூட்டிவந்து குருநாடுசேருமென்றார்
என்வார்த்தைதள்ளாமல் இட்சணமேகேட்வுமென்றார்
போய்வாருமென்றுசொல்லி புத்திமிகவுரைத்தார்
அப்போதருச்சுனனும் அப்படியேநல்லதென்று
குந்தியம்மாள் தன்பாதங் கொப்பெனவேதெண்டனிட்டார்
தாயாருடபாதஞ் சாஷ்டாங்கதெண்டனிட்டான்
மதுரைக்குப்போய்வாரேன் மாதாவேசெலவருளும்
போய்வாருமர்ச்சுனரே என்றாளேபொற்கொடியும்
வெற்றிமதயானை வீமாசெலவருளும்
அத்தண்டபேரும் அணைவோகுளுசெலவருள
முகத்திலேசிலையிட்டு முடிமன்னர்தானழுதார்
ஏதுக்கழுகிறாய் ஈஸ்வரன்துணையிருப்பான்
மைந்தன்புலந்திரற்கு வாட்டமொருக்காலுமில்லை
மாயன்துணையிருப்பார் வாழ்விசயாபோய்வாரும்
சொக்கர்துணையிருப்பார் சுந்தரரேபோய்வாரும்
என்றதுகேட்டு எழுந்தானர்ச்சுனனும்
அச்சுதானந்த ரையனுந்தானுமாய்
தோழனுந்தானுமாய் துரிதமாய்நடந்தார்கள்
கோட்டைகடந்து கொத்தளமுந்தான்கடந்து
தர்மாபுரங்கடந்து தானடந்தானர்ச்சுனனும்
காடுகடந்து கரியமலைதான்கடந்து
ஆறுகடந்து அரியசுனைகடந்து
சிலலென்றகாடுஞ் செடியும்வனங்கடந்து
வைகைகரைகடந்து மதுராபுரிதேடி
தோழனுந்தானுமாய் துரிதமாய்நடந்தார்கள்
மதுரையிலுள்ளவரைக் கண்டானேவாள்விசயன்
அச்சுதானந்த ரையர்முகம்நோக்கி

மைந்தன்புலந்திரற்கு வாட்டங்களுண்டானல்
கம்மாதோநாடு கலக்காதோராச்சியங்கள்
என்னைக்கண்டபோதே எல்லாம்புலம்பாதேசா
மைந்தன்புலந்திரற்கு வாட்டங்களொன்றுமில்லை
எத்தைநினைத்தாளோ நாடாளும்ராசாத்தி
முன்னதுபூசல் முதலைநினைத்தாளோ
ஆங்காரக்கன்னியென்று அறிவோமவள்குணத்தை
அச்சுதானந்த ரையரும்கூறிவோர்
அவள்-வார்த்தைக்குவார்த்தை மறுவார்த்தைபேசாதே
சொல்லுக்குச்சொல்லு சொல்தள்ளிப்பேசாதே
நீர்-முன்னேநடவுமென்று முகப்பணியிலுட்கார்ந்தார்
வாள்விசயன்கோமானும் வந்தானரண்மனைக்கு
அங்கிருக்கும்தூதுவர்கள் அர்ச்சுனரைக்கைதொழவும்
உங்கள்துரையெங்கேயென்றார் உலகாளும்ராசாவும்
ஆயிரங்கால்மண்டபத்தில் அங்கேயிருக்கிறார்கள்
என்றதுகேட்டு எழில்விசயன் தானடந்தார்
மாணிக்கமண்டபத்தில் வாள்விசயன்போய்நடந்தான்
கொம்பனைக்குமுன்னேவந்து கும்பிட்டான்வாள்விசயன்
கையெடுத்துகும்பிட்டான் காளையர்த அர்ச்சுனனும்
வணங்கின அர்ச்சுனனை வாவென்றழைக்காமல்
ஏனென்றுகேளாமல் ஏறமுகம்பார்க்காமல்
நின்றேயர்ச்சுனனும் நெடுங்கால்கடுத்துவிட
இருகால்கடுத்துவிட இருநாழிநின்றானும்
ஆனாலழகுமன்னன் அர்ச்சுனனுமேதுசொல்வான்
ஒரு-ஆளடிமையென்றாலும் அரசாதுநாயகமே
வந்தவாரென்று வினவியேகேளாமல்
எங்குவந்தீரண்ணாவே ராசகுலப்பெண்பெருமாள்
என்றதுதான்கேட்டு இளங்கொடியாளல்லியரும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தானுங்கேட்டு
மன்னவரர்ச்சுனன்மேல் மர்மந்தொடுப்போமென்றாள்
மைந்தனுக்குப்பவளத்தேர் வாராதுயென்றுசொல்லி
அண்ணாக்துபார்த்தாளே அர்ச்சுனராசாவை
கண்டாளருச்சனரை கதையுள்ளமன்னவரை
முகத்திலேவிழிக்கவென்று விதியோதாமெந்தனுக்கு
உன்னைக்-கண்ணாலேகாணக் கிடைத்ததோயெந்தனுக்கு
தம்பிபுலந்திரனும் தங்கத்தேர்கேளாமல்
மாணிக்கத்தேர்வேண்டி கேளாமல்மன்னவரே
பாண்டிவளநாட்டானும் பவளத்தேர்கேட்டதினால்
உன்னைக்-கண்ணாலேகாணக் கிடைத்ததேயெந்தனுக்கு
கண்ணானமைந்தனுக்கு திருஷ்டிகழித்துவிட்டேன்

என்றதுகேட்டானே எழில்விசயனர்ச்சுனனும்
வில்லாளிபார்த்தனவன் விசயனுமேதுசொல்வான்
பாண்டிவளநாட்டுக்கு பவளத்தேர்வேண்டுமென்றால்
ஒரு-ஆளோடேசொல்லி அனுப்பிவைத்தீரானாலே
பவளத்தேர்சொப்பனிட்டு அனுப்புவேனபத்தினியே
மைந்தன்புலந்திரற்கு வாட்டங்கள்வந்ததென்று
தோஷித்துப்போச்சுதென்ற சொல்லியனுப்பலாமோ
தருமருந்தான்கேட்டு தயங்கியழுதாரே
வீமரதைக்கேட்டு மெத்தவழுதாரே
ஈரல்புகுந்ததொரு இரட்டையர்கள்தானழுதார்
மந்தாரக்குந்தியரு மாதுபுலம்பிவிட்டாள்
தீயிற்பிறந்தவளுந் திகைத்துப்புலம்பிவிட்டாள்
அன்னகருநாடும அரசந்தனும்பிற்ற
தர்மாபுரத்திலுள்ளோர் தவித்துப்புலம்பலுற்றார்
இப்படிக்குஓலை யெழுதுவதுஞாயமோ
பூமியரசாண்டோர்கள் பொய்யோலையெழுதலாமோ
அவ்வார்த்தைகேட்டுமவள் அல்லியருமேதுரைப்பாள்
பாராளும்வேந்தனவன் பவளத்தேர்வேணுமென்று
உண்ணேன்குளியேனென்றான உறங்கேனென்றான்பஞ்சணையில்
சாவேன்மடிவேனென்றான் சமர்த்துள்ளபுத்திரனும்
பாலமுதமுண்ணேனென்றான் பள்ளிக்குப்போகேனென்றான்
மெய்யாகச்சொல்லி யெழுதினான் ஓலையிலே
மாலைமுடியானே வருவதொருக்காலுமில்லை
சித்தசன்தங்கையவள் சிற்றிடைச்சுபத்திரையாள்
சேர்ரவளநங்கை சுபத்திரைநாயகியாள்
அவள்மயக்கமெத்தலவோ ஆணழகாவுந்தனுக்கு
அவளுடையமோகமதாய் அலலும்பகலுமாயிருப்பாய்
தேவடியாள்வீதியெல்லாக் திட்டுண்டுதிரிகிறவன்
நீ-வருவீரோவாரீரோ யென்றெண்ணிமன்னவனே
இந்த-கூத்திமேலாசையுண்டோ குழந்தைமேலாசையுண்டோ
உந்தன்மனதறிய யெழுதினேனோலையென்றான்
மெய்யென்றுசொல்லி வந்தீரோவாள்விசயா
பவளத்தேர்கொண்டுவந்து தாரீரோவாள்விசயா
ஆமென்றால்சொல்லுமிப்போ அல்லவென்றால்போமென்றாள்
மதுராபுரியாளே மருடத்துரைச்சிபரே
தீவாந்தரத்திற்போய் தேடியேகொண்டுவாரேன்
எங்கேயிருந்தாலும் இட்சணமேகொண்டுவாரேன்
பாங்கானபுத்திரற்கு பவளத்தேர்கொண்டுவாரேன்
எத்தனைநாளையிலே எனக்குந்தேர்கொண்டுவருவீர்
பொய்வசனஞ்சொல்லாமல் போர்விசயாநீயுரையும்

மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்றான்
ஒன்பதுநாளையிலே உனக்குத்தேர்கொண்டுவாரேன்
பவளமவெட்டப்போனிடத்தில் பார்த்திபா அர்ச்சுனரே
தேர்வேண்டிப்போனிடத்தில் தேர்விசயா அர்ச்சுனரே
கானகத்தில்கன்னியரை கண்டுமயங்காதே
பல்லைத்திறந்திடுவாய் பரியாசஞ்செய்திடுவாய்
மருமக்களாகவே யிருப்பீரோமன்னவனே
அப்படியாகவே யிருந்ததேயுண்டானால்
எமலோகஞ்சென்றாலும் இட்டுவந்துசங்கரிப்பேன்
பாதாளம்போனாலும் கொண்டுவந்துசங்கரிப்பேன்
வாள்விசயனர்ச்சுனனும் மருக்காமலேதுரைப்பார்
ஐந்துபிராயம் அழகுள்ளபுலந்திரனார்
மைந்தர்மேலாணையது மச்சுரதங்கொண்டுவாரேன்
மைந்தன்மேலாணையிட மனது துணிந்ததோதான்
பிள்ளையின்மேலாணையிடப் போதமனம்வந்ததோ
ஏதாய்த்துணிந்தது என்மகன்மேலாணையிட
இருவருமாகவே யிருந்தங்கேபேசையிலே
அச்சுதானந்த ரையரும்வந்துவிட்டார்
குருக்கள்மகனாரைக் கொப்பெனவேதான்பார்த்து
வாருமென்றுதானழைத்தாள் மகுடத்துரையல்லியரும்
வைகைவளநாடதிந்து வந்தீரோமன்னவனே
வாழ்மதுரைதேடி வழியுந்தெரிந்ததோ
மதுரைக்குஓர்பயணம் வாறதிருந்ததென்ன
என்னைச்சிறைவைத்தாரே எழில்விசயன்கோமானும்
என்னைமறந்து யிருந்தானெழில்விசயன்
அவர்தான்வருகாமல் போனாலுமச்சுதரே
நீர்தானொருபயணம் இங்குவரலாகாதோ
வாள்விசயனில்லாத வரவுஞ்செலவுமில்லை
நல்விசயனில்லாமல் நான்தான்வருவேனோ
ஆனால்கேளையமே அச்சுதானந்தரே
பிள்ளைபுலந்திரனார் பவளத்தேர்கேட்டதினால்
ஆகையினாலே யழைப்பித்தேனர்ச்சுனரை
மாலையிட்டநாள்முதலாய் வணங்காதகன்னிகைநான்
மைந்தனுக்காகவே வணங்கினேனர்ச்சுனரை
பாண்டிவளநாட்டுக்குப் பவளத்தேர்சொப்பனிட்டு
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
மைந்தன்மேலாணையென்று மன்னவரும்வாறார்காண்
அண்ணாவேநீரும் அரிக்கிடுபிதனையென்றாள்
அம்மா-எந்தெந்த ஆணை மறந்தாலும்வாள்விசயன்
மைந்தர்மேலாணை மறப்பாரோவாள்விசயன்

எப்படியுங்கொண்டு வருவானெழில்விசயன்
இப்படியாகவே யிருக்கின்றவேளையிலே

### பாண்டியர்கள் அர்ச்சுனனைக் காணவருதல்.

அர்ச்சுனர்வந்தசேதி அறிந்தந்தபாண்டியரும்
மருமகனைக்காணுகைக்கு வாறார்கள்பாண்டியர்கள்
மகமேருபர்வதம்போல் மகிழ்ச்சியுடன்வாறார்கள்
பொன்னுமலைநாடாளும் போரெழுதியார்கூட
அல்லியம்மாள்தன்னருகே அனைவோரும்வந்தமர்ந்தார்
மகுடத்துரைச்சியாளும் வணங்கினாளப்போது
வாருமிருங்களென்று மரியாதைபண்ணினாள்
அர்ச்சுனரைத்தான்பார்த்து ஆறாயிரம்பாண்டியரும்
மதுரைக்குவரவுமக்கு வழியுக்தெரிந்ததோ
வைகைவளநாடு வழியுந்தெரிந்ததோ
மதுரைக்கொருபயணம் வாறாதிருந்தென்ன
வாறாமல்நீயிருக்க வைராக்கியங்களுண்டோ
அத்திமரம்பூத்ததுபோல் அதிசயமாயத்தோணுது
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
பாண்டிவளநாட்டாளும் பவளத்தேர்கேட்டதினால்
ஆகையினாலே அழைப்பித்தேனானிவரை
சீக்கிரமாய்தீவுக்கு போங்காணும்தேர்விசயா
ஆறாயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
வந்தக்காலாகவில்லை மாதுகுலப்பெண்ணரசே
இன்றொருநாள்போக்கிரீ இனியொருநாளாகாதோ
பசியோடிருக்கிறார் பாலமிர்தஞ்செய்யுமென்றார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
பாண்டிவளநாட்டார்க்குப் பவளத்தேர்வந்தபின்பு
விருந்துசமைக்கிறதும் வெகுமானம்பண்ணுறதும்
சீக்கிரமாய்தீவுக்கு சென்றுநடவுமென்றாள்
காண்டாவனமெரித்த காளையவன்தான்கேட்டு
மைந்தன்புலந்திரற்கு வாட்டமுண்டாச்சுதென்று
மைந்தராதவுத்தாரம் வந்தவுடனேநான்
சிவபூசைபண்ணவில்லை சலபானஞ்செய்யவில்லை
நான்-நாலால்நடவாமல் காற்றுப்பறந்துவந்தேன்
இன்றுபகலுக்கு இருந்துநான்போறேனென்றான்

### அர்ச்சுனனுக்கு விருந்திடல்

பிறவாமுடிதரிந்த பெண்பெருமாள்தான்கேட்டு
தனக்குத்தொழில்செய்யுந் தாதிமுகநோக்கி
அடிசில்சமையுமென்றாள் ஆனந்தவாழ்மாரி
அப்போதுதாதியர்கள் ஆரணங்குதானெழுந்து

பத்துவிதக்கறியும் பதினெட்டுபச்சடியும்
நல்லபொரிக்கறியும் ராசாக்கள்போசனமும்
பச்சென்றகாயும் பவளம்போல்நற்கறியும்
பேடதச்சமைத்தார்கள் பொற்கொடிமாதரெல்லாம்
அடிசில்சமைத்ததென்று அல்லியர்க்குதெண்டனிட்டு
அமுதுண்ணுஞ்சாலையிலே அல்லியருமர்ச்சுனனும்
போசனங்களுண்டு புண்ணியருங்கையலம்பி
சிங்காதனத்திலே சேரவேவந்திருந்தார்
அப்போது அல்லியரும் ஆரணங்குதானெழுந்து
காச்சாக்களிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
ஆரங்கிப்பாக்குகளும் மோரங்கிவெற்றிலையும்
வாகாயிலைச்சுருளும வர்ணத்துவர்பாக்கும்
கோவையிலைச்சுருளும் கொத்துதுவர்பாக்கும்
அள்ளிக்கொடுத்தாளே ஆணலழகனுக்கு
அந்தச்சமயத்திலே அர்ச்சுனரர்சாவும்
வம்புபரியாசஞ் செய்தாரே அர்ச்சுனனும்
அப்போது அல்லியம்மாள் ஆரணங்கேதுசொல்வாள்
ஐந்துவருஷமாக ஆர்ந்திருந்தகருமத்தை
இன்றெழுந்தநாழிகையில நினைத்திருக்கதர்மமுண்டோ
என்னாலேயாகாது என்றாளேயல்லியம்மாள்
அப்போதர்ச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்
பன்னிருகாதவழி பவளவனம்போறேகாண்
மனஸ்தாபம்பண்ணாதே மாலைமுடியாளே
மனஸ்தாபமென்னுமே மாதுதலைகுனிந்தாள்
தலைகுனிந்தசாடைதனைக் கண்டந்ததாதியர்கள்
தென்புறம்பள்ளியறை தேன்மொழிக்குதான்திறந்து
வலம்புறம்பள்ளியறை மயிலனைக்குத்தான்திறந்து
கட்டிலின்மெத்தைதனைக் கனக்கவிரித்துதரி
காம்பரிந்தமல்லிகைப்பூ கட்டிலின்மேல்பரப்பி
கச்சாயம்பன்னீரும் வைத்தார்கிளிமொழிக்கு
மஞ்சத்தினமேலாக மன்னன்குதித்தேறி
தக்கோலந்தின்று தனித்துவிளையாடி
வெற்றிலைதின்று விரும்பிவிளையாடி
கச்சாயந்தின்று களித்துவிளையாடி
காமக்கடலிலவர் கலந்துதெளிந்தார்கள்
மோகக்கடலிலவர் முழுகித்தெளிந்தார்கள்
தீராதஆசையெல்லாம் தீர்த்தானேதேர்விசயன்
ஆறாதஆசையெல்லாம் ஆற்றினாணழகன்
மஞ்சத்தைவிட்டிறங்கி வந்தாரிருவருமாய்
மஞ்சள்நீர்ச்சாலையிலே வந்துபுகுந்தார்கள்

காலோடுகையுங் கனிவாயுஞ்சுத்திசெய்து
மார்போடுதோளும் மதிமுகமுஞ்சுத்திசெய்து
அலங்காரமண்டபத்தில் அமர்ந்தாரிருவருமாம்
தாமமுடியார்கள் சதுராகப்பார்க்கலுற்றார்
அந்தச்சமயத்தில் அழகுபுலந்திரனார்

புலந்திரன் தகப்பனிடம்வருதல்

வீதிவிலாசமது விளையாடிவேல்வேந்தன்
பந்தடித்துசெண்டடித்து பாலன்விளையாடி
தாயாரருகே தார்வேந்தனோடிவந்தான்
மகனைக்காணவே வாரியெடுத்தணைத்து
உச்சிமுகந்தாளே உள்ளங்கால்முத்தமிட்டாள்
உங்கள்-ஐவர்மடிமேலே செல்லுமென்றனாரணங்கு
அப்போபுலந்திரனும் அர்ச்சுனன்முன்னேவந்தான்
வாரியெடுத்தாரே மகனார்புலந்திரனும் •
அப்பாவருகவென் அழகுள்ள இந்திரனே
பொன்னுங்குடமே புலந்திரனேவாருமென்றான்
தேர்விசையனருச்சுனனும் அருச்சுனருக்கேதுசொல்வான்
அப்போபுலந்திரனும் அர்ச்சுனருக்கேதுசொல்வான்
ஐயாவேவீரர்கேளும் ஆண்மையுள்ள அருச்சுனரே
தங்கத்தேர்தந்தாரே தனஞ்செயனாரென்பாட்டன்
செம்பொன்தேர்தந்தாரே சீருடையவென்மாமன்
மாணிக்கத்தேர்தந்தாரே மண்டலத்துராசாக்கள்
முத்துத்தேர்தந்தாரே முடிமன்னராசாக்கள்
சித்திரவீதிகளும் தெருவுபதினாயிரமும்
மட்டில்லாவீதி மதுரைக்கிலட்டிவைக்க
பாண்டியப்பெருமாளே பவளத்தேர்நான்கேட்டேன்
அப்படியேநான்தருவேன் அஞ்சாதேயென்மகனே
தீவுக்குப்போறேன் தீவிரமாய்கொண்டுவாரேன்
எங்கேயிருந்தாலும் இட்சணமேகொண்டுவாரேன்
எத்தனைநாளையிலே எனக்குத்தேர்கொண்டுவாரீர்
மைந்தனவர்கேட்டு மனதுதெளியாமல்
மூன்றுநாளாறுபொழுதிலே கொண்டுவாரேனென்றார்
ஒன்பதுநாளையிலே உனக்குதேர்கொண்டுவாரேன்
இருமிருமென்றுசொல்லி எழுந்திருந்தார்மன்னவனும்
அச்சுதானந்த ரையருந்தானுமாய்
எழுந்துநடந்தாரே மித்திரமலைமேலே
கூடநடந்தானே கொம்பனையாளாரணங்கு
ஆனைசேனைபரிவாரங்கள் அனுப்புவேனராசாவே
சேனைபரிவாரத் திரளணியுங்கூட்டுவேனோ
உத்தமவீரியர்கள் இருவரும்போரீரோ

ஆனையுஞ்சேனையும் அனுப்பவும்வேண்டாங்காண்
இருவரும்போய்வாரோம் என்றுவழிநடந்தார்
மன்னவரிருவருமாய் மந்திரவாள்கைபிடித்து
வைகைகரைகடந்து மதுராபுரிகடந்து
எல்லைகடந்து இளந்தோப்புதான்கடந்து
காவல்கடந்து கரியமலைதான்கடந்து
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
எட்டடிவேங்கை யிருக்கும்வனங்கடந்து
பத்தடிவேங்கை பருத்தவனங்கடந்து
வேந்தறியாத வெளிக்காடுதான்கடந்து
சிங்கமுறங்குவனம் சிறுபுலிகள் தூங்குவனம்
கருநாரைக்கிரைதேடும் கதலிவனங்கடந்தார்
பவளம்விளைகின்ற பாங்கானகாடுகண்டார்
செங்காடுதீபட்டாற்போல் தோணுவதைக்கண்டார்
அச்சுதானந்த ஐயரேயென்தோழா
நான்போகாதகாடுமில்லை ஆடாததீர்த்தமில்லை
பார்த்தாரிருவருமாய் பவழக்காடுள் நுழைந்தார்
கொம்புங்கயிறுகளும் கலந்தகொழுந்துகளும்
ஒடிப்படர்கிறதும் உயர்ந்தகொம்பாய்நிற்கிறதும்
தாவிப்படர்கிறதுஞ் சன்னல்பின்னலாகிறதும்
வேரிற்பவளமது மின்னுகிறகாந்திகளும்
பார்க்கமுடிகூடாது பவளம்விளைகிறதை
பவளப்புதுமைகளை பார்த்துதிகைத்துநின்றார்
அக்காட்டிற்றனிருக்கும் ஆங்காரக்கதண்டுகளும்
ஆனைத்தலையை அறியுங்கதண்டுகளும்
குதிரைத்தலைபோ லிருக்குமாங்கருங்குளவி
சிங்கத்தலைபோ லிருக்குமாஞ்செங்குளவி
முழமளவாய்மார்பள்வாய் வெளிப்பட்டுவந்தது
விசயனைக்கொல்லுகைக்கு வந்தகதண்டுகளும்
மன்னனருச்சுனரின் மட்சரேகையைப்பார்த்து
தேவாதிபிண்டமிவன் தேர்விசயனர்ச்சுனன்காண்
பேருல்பேர்பெற்ற பெருமானிவர்காணும்
இவரைநாம்-கொன்றோமேயாமானால் குடிகேடுவந்துவிடும்
நமது-கூட்டமழிந்துவிடும் குலக்கேடுவந்துவிடும்
என்றுபயந்து எழும்பிக்கதண்டுகளும்
அஞ்சிப்பயந்து அடவியில்சென்றதுகாண்
ஆணலழகுமன்னன் அர்ச்சுனனுமேதுசொல்வான்
அச்சுதானந்த ஐயரேயென்தோழா
நான்-தேவாதிபிண்டமென்று தெரிந்ததுகதண்டுகளும்

நம்மைக்கண்டபோதே நடுநடுங்கிச்சென்றதுநாண்
என்றவர்கள்சொல்லி யிருக்குமந்தவேளையிலே
கானகவேடுவர்கள் அவ்வழியேவாறார்கள்
அர்ச்சுனமாயவரை அறிந்தாரேவேடுவர்கள்
கண்டுபயந்தார்கள் நடுங்கிவந்துதெண்டனிட்டார்
வேடுவரோநீங்களென்று விஜயனார்கேட்கலுற்றார்
ஆரையாநாங்கள் ஆரணியவேடரென்றார்
இக்காட்டுக்குள்ளே இருக்குங்கதண்டுகளும்
உங்களைக்கொல்லாதோ உத்தமரேசொல்லுமென்றார்
கதண்டுகள்கொட்டாதோ காவலரேஉங்களையும்
தென்னாட்டுப்பேர்களைத் தீண்டாதுகதண்டுகளும்
முகமறியாதவரை முரித்துக்கிடத்திவிடும்
கதண்டுகொட்டிசெத்தவர்கள் கணக்குமிதங்களில்லை
எங்கள்துரைபவளக்கொடி எழுப்பினதனந்தமுண்டு
செத்துமடிந்தவரை சீவனுடனெழுப்பிடுவாள்
என்றுமவர்சொல்ல ஏதுசொல்வானருச்சுனனும்
எங்கள்துரையென்றீரே உங்கள்துரைபேரென்ன
ஆருடையராச்சியங்கள் அறியவுரையுமென்றார்
பெண்ணரசுதானே புண்ணியரேசொல்லுமென்றார்
அந்தவரலாற்றை அன்பாகச்சொல்லுமென்றார்
ஆனால்கேளையாவே அடியேனுரைத்திடுவேன்
சேரும்புராசாக்கள் துரைகளவரைம்பதுபேர்
ஐம்பதுராசருக்கும் ஆணுமில்லைபெண்ணுமில்லை
பவளக்கொடிராச்சியத்தை ஆளுகைக்குபாலனில்லை
காணாதகோயிலுக்கு காணிக்கையனுப்பிவைத்தார்
இலையிலேசாதமுண்டால் என்னதவமென்றுசொல்லி
தரையையவர்மெழுகி சாதங்களுண்டார்கள்
பாலடைக்குப்பால்கொடுப்பார் பசித்தார்முகம்பார்ப்பார்
தவித்துவந்தபேர்களுக்குத் தண்ணீர்பந்தல்வைத்தார்கள்
சாலைகள்போட்டுவைத்தார் சத்திரங்கள்கட்டிவைத்தார்
நல்லதண்ணீர்கிணறுகளும் நடபாயுங்கட்டிவைத்தார்
சோகிபரதேசிகட்கு திருமடங்கட்டிவைத்தார்
குளங்களெடுத்துவைத்தார் கோபுரங்கள்கட்டிவைத்தார்
என்னதவம்பண்ணினாலும் எதினாலும்பிள்ளையில்லை
பத்தாண்டுசென்று பேய்ந்தபெருமழைக்கு
தெப்பலாய்நின்று மிதந்துதவம்பண்ணார்கள்
மைந்தனைவேண்டியல்லோ மாளிகைமறந்தார்கள்
புத்திரனைவேண்டியல்லோ பூமிமறந்தார்கள்
அவர்மேல்-ஆலம்விழுதோடி அறுகுமுளைத்திடவும்

அரகராவென்றுசொல்லி அகோரதவம்பண்ணார்கள்
சிவசிவாவென்றசத்தம் தெய்வலோகந்தான்கேட்கும்
அவர்-பண்ணுந்தவப்பயனை அறிந்தல்லோஈஸ்வரனும்
ஈஸ்வரனும்பார்வதியும் இடபத்திலேறிவந்து
சேரும்புராசனிடம் சிவன்வந்துயேதுசொல்வார்
நீங்கள்-கூலிகுறைத்தவர்கள் குறைமரக்கால்போட்டவர்கள்
அங்காடிக்கூடையை அதிரவிலையிட்டவர்கள்
பத்தட்டிநெல்லிலே பதரைக்கலந்தவர்கள்
ஏரிகுளமடைத்தோர் எந்தன்பகைகுலைத்தவர்கள்
நந்தவனமழித்தவர்கள் நற்பெண்டைக்கெடுப்பவர்கள்
பாலடைக்கும்பால்வாரார் பசித்தார்முகம்பாரார்
நீங்கள்-ஏதுதவம்பண்ணினாலும் எதினாலும்பிள்ளையில்லை
இந்தப்பிறப்பிலேயும் எழுபிறப்புபிள்ளையில்லை
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வாராசாக்கள்
என்னபாவம்பண்ணினாலும் ஏதுதோஷஞ்செய்தாலும்
பாவத்தைதீர்த்துவிட்டு பாலகனைத்தாருமையா
என்றவர்கள்துதிக்கையிலே ஈசர்மனமிரங்கி
பவளக்கொடிமேலே பாலகியையுண்டாக்க
குவ்வாகுவ்வாவென்று குழந்தையழுகுந்தாடா
ஆணுமதுபெண்ணுமது அழகாய்வளர்த்திடுங்காண்
செம்மையாயிருங்களென்று சொல்லிநடந்தார்காண்
பெண்ணையெடுத்துவந்து போதவளர்த்தார்கள்
கவிழ்ந்தாள்தவழ்ந்தாளே கன்னியிளமயிலும்
ஒருவயதிருவயது வொன்றிரண்டுமூன்றுச்சி
ஐந்தாம்பிராயத்திலே அறிந்தாள்பலகலைகள்
பவளக்கொடியாளென்று பார்லோகமாளுகிறாள்
ஆணரசாண்டாலே அழிந்துபோம்சீமையென்று
பெண்ணரசாளுகிறாள் பேடைமயிலனங்கு
என்றதுகேட்டானே இளவிசையனருச்சுனனும்
வாலைப்பிராயமோ வயதுமெத்தசென்றவளோ
பதினாறுவயதாச்சு பக்கமெல்லாம்பிஞ்சல்லோ
கொஞ்சம்பிராயம் கொழுந்தெல்லாம்பிஞ்சலவோ
பாதிப்பிராயம் பக்கமெல்லாம்பிஞ்சல்லோ
காய்க்கும்பிராயமையா கனியுதிருந்தற்காலம்
பூக்கும்பிராயமையா பிஞ்சுவிடுங்காலமது
தன்வயதுதானறியாள் தையலிளங்கொடியாள்
ஆனாலும்வேடவனே அவளழகைச்சொல்லுமென்றார்

வேடன் பவளக்கொடியாளழகைச்சொல்வது.

ஏதென்றுசொல்வேனையா இளங்கொடியாள்தன்னழகை
பார்க்கமுடியாது பத்தினியாள்தன்னழகு

நீர்முட்டைபோலிருக்கும் நேரிழையாள் தன்னழகு
சேலகெண்டைபோலிருக்கும் தேன்மொழியாள் தன்னழகு
மேற்புருவமிரண்டழகும் வேப்பிலைச்சாயலைப்போல்
மயிரழகும்பாவனையும் வண்டுமுதுகதுபோல்
ஈச்சம்பழத்திலே யிருண்டகறுப்புமுண்டு
அவள்-மயிரோகறுப்பொழிய மற்றகருப்புமில்லை
அவள்-புருவங்கறுப்பொழிய பின்னைகருப்புமில்லை
தேய்பிறைச்சாயலைப்போல் சிறுநெற்றிதன்னழகும்
சீரியமூக்கழகும் சிவந்தமுகத்தழகும்
முத்துபோற்பல்வரிசை முருக்கிதழ்போற்செவ்வுதடும்
வாழைத்தண்டுபோலே வளர்ந்ததுடையழகும்
கழுத்தழகும்பாவனையும் கமுகுகுலைசாய்ந்தாற்போல்
அகண்டபுஜமழகும் ஆலிலைபோல்தன்வயிறும்
முளைத்தெழுந்தமூங்கில்போல் மொய்குழலாள் தன்புஜமும்
பத்துவிரலழகும் பயித்தங்காய்நெத்ததுபோல்
சிங்கத்திடையழகும் சிறுநயிடையழகும்
இருதுடைரண்டழகும் இளவாழைத்தண்டதுபோல்
முத்துசிப்பிதைத்ததுபோல் முழங்காலிரண்டழகும்
பாம்பின்படம்போலே பாதத்திரண்டழகும்
புத்தகஞ்சேர்ந்தாற்போல் புறங்காலின்பின்னழகும்
அவளுக்குவொப்பானோர் ஆருமில்லைவையகத்தில்
சுவரிலெழுதலாம் சித்திரம்போல்பார்க்கலாம்
படத்திலெழுதலாம் பதுமைபோல்பார்க்கலாம்
சந்திரன்போலே தளும்புகிறாள் தையனல்லாள்
சூரியனைப்போலே துள்ளுகிறாள் தோகையரும்
ஈயத்தைக்காய்ச்சி யிலையிலேவிட்டாற்போல்
பொன்னையுருக்கியே பூமியிலேவிட்டாற்போல்
தங்கத்தைக்காய்ச்சி தரையிற்கவிழ்த்தாப்போல்
நீருபூத்தநெருப்பை ஊதிபார்த்ததிறம்போலே
ஆயிரமின்னலிலே சோதிமின்னல்பிறந்தாற்போல்
பார்க்கமுடியாது பத்தினியாள் தன்னழகை
அவ்வார்த்தைகேட்டுமே அர்ச்சனனுமேதுசொல்வான்
அவளை-மண்டலத்துராசாக்கள் மாலைதரித்தாரோ
கன்னியிளங்கொடிக்கு கலியாணஞ்செய்தாரோ
என்று-விசயனவன் கேட்கையிலே வேடுவனுமேதுசொல்வான்
நாலுலட்சங்கோடியுண்டு நாயகியைநாடிவந்தார்
பத்துலட்சங்கோடியுண்டு பத்தினியைக்கேட்டவர்கள்
வண்ணலட்சங்கோடியுண்டு மாதரைக்கேட்டவர்கள்
கைநீட்டிமாலையிட்டார் காசினியிலாருமில்லை
நித்தியகன்னியாகவே யிருக்கிறாள் நேரிழையாள்

நல்லதுவேடுவனே நாயகிமாதாவள்
கன்னியிளங்கொடியும் கனவேட்டையாடுவாளோ
வேட்டைக்குவாரதுண்டோ வேடுவரேசொல்லுமென்றார்
மாதக்கன்னியரும் வாராளேவேட்டைமுகம்
ஆனால்கேளாயாவே அடியேனொருவார்த்தை
மாதமொருபயணம் வனவேட்டைவாரதுண்டு
திங்களொருபயணம் வாராளேதேன்மொழியாள்
மற்றொருநாளையிலே வருகிறதில்லையென்றான்
ஆனால்கேள்வேடுவனே அறியவொருவார்த்தை
காட்டிற்குவந்தாலே கன்னியிளங்கொடியும்
பவளக்கொடியாளும் பாரிவேட்டைவந்தாலே
இந்தவனத்திலே யிருக்குமிருகங்களில்
எந்தமிருகத்தின்மேல் இச்சையுண்டுமாதருக்கு.
அவளாசைகொண்டமிருகம் ஆணழகாசொல்லுமென்றார்
ஆனால்கேளையாவே அடியேன்வாய்விண்ணப்பம்
எந்தமிருகமது எதிர்பட்டுவந்தாலும்
கண்டமிருகத்தை கண்டிப்பாள்தப்பாமல்
அன்னத்தைக்கண்டாளே ஆசையாய்விட்டிடுவாள்
மற்றொருமிருகத்தை மாதுநல்லாள்கண்டாலே
வெட்டியெறிந்திடுவாள் வீரமணிவாளாலே
பன்னிருகாதவழி பவளம்விளைகிறது
நடுவேயிருக்கிறது நாயகியாள்கோட்டையது
புகழாயிருக்கிறது பொற்கொடியாள்கோட்டையது
ஆனால்நீர்போய்வாரும் அன்புள்ளவேடுவனே

## அருச்சுனன் பவளக்கொடிமேல் மோகித்தல்.

வேடுவனும்போனபின்பு விஜயனுமேதுரைப்பான்
அச்சுதானந்த ஐயரேயென்தோழா
ஆரணங்குவார்த்தைதனை யன்பாகக்கேட்கையிலே
மன்மதன்பாணமது மார்புருகிப்போகுதே
சித்தசன்தொட்டகணை சிறுமார்புருகுதே
மாரனவனெய்தகணை மாரைப்பிளக்குதே
ஆறுருகுபாணமது மார்புருகிப்போகுதே
அவளைக்-கண்ணாலேகண்டாலே காமன்கணைதீரும்
பார்த்தாலேயாமானால் பசிதாகந்தீருமென்றான்
என்றைக்குக்காண்பேனோ ஏலம்பசுங்கிளியை
மாலைதரியாமல் வருவதில்லையென்தோழா
கல்யாணம்பண்ணாமல் வருவதில்லையென்தோழா
அவளழகைப்பார்ப்பதெப்போ என்னாசைதெளிவதெப்போ
கொம்பனையாளுடைய குரலோசைகேட்பதெப்போ

அச்சுதானந்த வையருமேதுசொல்வார்
ஏங்காணும்வாள்விசையா இந்தமதியுக்தனுக்கு
மருடத்துரைச்சியவள் வாழ்வரசியல்லியற்கு
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
மைந்தன்மேலாணையிட்டு வந்தீரேமன்னவனே
மற்றொருகன்னியரை மணமாலைசூட்டினால்
மருடத்துரையல்லியரும மங்கையவள்பொல்லாதாள்
வாழ்பாண்டிநாடுடையாள் வருவாளேபடைகூட்டி
சொல்லுக்குமஞ்சாளே தொடர்ந்தபடையெடுப்பாள்
வெட்டத்துணிந்திடுவாள் வீரமணிவாளாலே
வேண்டாங்காணென்தோழா வெறுத்துவிடுமவளாசை
ஆணலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
நீ-என்ன தான்சொன்னாலும் என்செவியிலேறாது
மாதரந்தக்கன்னிகையை மணமாலைசூட்டினாக்கால்
அன்றவிகாரந் தெளியுங்காணென்தோழா
நான்-செத்துமடிந்து செலவழிந்துபோனாலும்
மாண்டுமடிந்து வைகுந்தம்போனாலும்
செத்தயிடந்தனிலே செங்கழனிப்பூபூர்ப்பேன
குடமல்லிபூபூர்த்து கொண்டையிலேபோயிருப்பேன்
கொண்டைக்குபூவாவேன் கொசவணத்திற்பையாவேன்
கண்ணுக்குமையாவேன் அவள்காலுக்குமெட்டாவேன்
நாயகியாள்நெற்றியிலே நற்சாந்துபொட்டாவேன்
அவள்-மூக்தானிதொங்கலிலே தொத்திவந்துமுள்ளாவேன்
என்றுதெளியுமோ எக்காலஞ்செல்லுமோ
என்று-கைசோர்ந்துமெய்சோர்ந்து கனத்தமுகஞ்சோர்ந்து
சகலகலைதுகிலுடுத்தி தான்வந்துமேலாடி
நேமங்கெட்டுமதிகுலைந்து நினைவுதடுமாறி
மயங்கிவிழுந்தானே மாதர்மேல்நினைவாகி

### பவளக்கொடியாள் வேட்டைக்குவருதல்.

அன்றையபோதிலே ஆனந்தவாழ்மாரி
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
செங்கோலுடையாளும் சிகாரிபுறப்பட்டாள்
வேல்பொருதுங்கண்ணாளும் வெளியேபுறப்பட்டாள்
ஈட்டிபிடிமன்னவர்கள் யேழுலட்சம்பத்துலட்சம்
கத்திபிடிமன்னவர்கள் கணக்குமிதங்களில்லை
பட்டயநேரிசமும் பாரியவில்சமுதாடும்
நிமிஜாபெரியலகு நேரிசமாம்பெரியகத்தி
கூலிசமும்சூலிசமும் குண்டுகுழல்துப்பாக்கிகளும்
எண்ணான்குஆயுதமும் எடுத்தரையிற்கட்டினாள்
பாராசாரிபுரவியின்மேல் பவளக்கன்னியேறினாள்

சத்திக்குடைபிடித்தார் சூரியனைத்தான்மறைத்தார்
ஆள்பெருஞ்சேவகரும் அனந்தங்கோடிசேனைகளும்
தாதிகளுமூப்பிகளும் தையல்மார்சூழ்ந்துவர
பத்துலட்சம்சேனையுடன் பாரிவேட்டைவாராளே
ஆனையின்மேல்பேரிகை குதிரையின்மேல்டங்காவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைகிளம்புகுது
பேய்த்தாரையூதவே பெரியடமாரோலடிக்க
சின்னமுழங்கவே திருச்சின்னந்தான்முழங்க
ஐங்காதவழிதூரம் அதற்கேற்றபெரியதாரை
பயணம்பயணமென்று பயணபேரியடிபடுது
அந்தவனங்களெல்லாம் அதிரவருகிறாள்
பொங்குகடல்போலே போய்புகுந்தார்கானகத்தில்
மான்வேட்டையாடியே மயில்வேட்டைதானாடி
குயில்வேட்டையாடியே குருவேட்டைதானாடி
வக்காவும்கொக்குகளும் வருக்குருவிதாராவும்
அம்புக்கொருகுருவி ஆரணங்குபெய்துவிட்டாள்
வேட்டைகளாடியே விடாய்த்துத்தளர்ந்தாரே
கானகத்துமண்டபத்தில் கடுகவந்திறங்கினார்கள்
பஞ்சணைமெத்தையிலே பதியக்கொலுவிருந்தாள்
தாம்பூலமுண்டு தனியேகொலுவிருந்தாள்
வாசங்களுண்டு மகிழ்ந்துகொலுவிருந்தாள்
கேளிக்கைபார்த்திருந்தாள் கெம்பீரநாயகியாள்
சங்கீதம்பார்த்து இருக்கிறாள்தையனல்லாள்
அப்போதுவாள்விசயன் அருச்சுனனுந்தானெழுந்து
அச்சுதானந்த ஐவர்முகம்நோக்கி
வந்தாள்காண்வந்தாள் மாதரிளங்கொடியும்
பவளக்கொடியாளும் பைங்கிளியாள்வந்தாள்காண்
கானகத்துமண்டபத்தில் வந்தமர்ந்தாள்கன்னியரும்
மத்தளவோசையது கேட்குதுகாண்மாயவரே
என்னவடிவானாலும் எடுத்துக்கொள்ளும்போர்விசயா
அருச்சுனரேவுன்னடத்தை யறிந்துமிருந்துநான்
அலைச்சல்படும்படியாய் அறியாமலுன்பின்வந்தேன்
கதண்டுகொட்டிமடிந்தாப்போல் இருக்கின்றேன்கானகத்தில்
நீ-கால்வேறாய்கைவேறாய் கட்டிக்கிடத்திவைத்து
மாயவரேசுத்திவந்து மாரடித்துநீரழுங்காண்
என்னைச்சுத்திவந்து இழவுகுடுங்காணும்
பெண்ணுவடிவெடுத்துப் போதவழுதிடுங்காண்
மாரிழவுகொடுத்தெனக்கு மயிரிழவுநீர்கொடுங்காண்
குரலோசைநீயெடுத்துக் கூவியழுதாலே
பெண்குரலைக்கேட்டு பொற்கொடியும்வந்திடுவாள்
ஆரென்றுபார்க்கவே வருவாள்காணாரணங்கு

அச்சுணங்குயிக்குவந்து ஆரென்றுகேட்டாக்கால்
ஏக்காலையிட்டகணவனென்று மயிலணைக்குநேருறையும்
ம தீர்த்தயாத்திரைவந்தோமென்று செப்புங்காண்டேன்மொழிக்கு
மங்கிலியப்பிச்சைகேளும் மாதரொழுப்பிடுவாள்
ஆனந்தவாழ்மாரி அவளைமாலைசூட்டுகிறேன்
கண்ணுக்குநன்றானால் கனமாலைசூட்டுகிறேன்
அழகாயிருந்தாலே அவளைமணஞ்செய்திடுவேன்
வடிவுநன்மட்டானால் மதுரைக்குப்போய்விடுவோம்
என்றுசொல்லியருச்சுனரும் எம்பெருமாளைவினைத்து
பார்த்திபனருச்சுனரும் பரமனைத்தானினைந்து
அருச்சுனன்றதண்டுகொட்டி செத்தவன்போலிருந்தான்
பொந்தியைத்தானடக்கிப் பொட்டெனவேபூமியிலே
மூர்ச்சைபடக்கியே முடிசோர்ந்துகீழ்விழுந்தான்
செத்தவனைப்போலாகச் சோபித்துகீழ்விழுந்தான்
அச்சுதானந்த ஐபரவசேதுசெய்தார்
கால்கைகள்வேறாகக் கட்டிகிடத்திவைத்து

ஸ்ரீகிருஷ்ணதேவர் பெண்வடிவெடுத்துப் புலம்பல்.

பெண்ணாய்வடிவுகொண்டு போதப்புலம்புகிறார்
தன்னுடையதலைமயிரைத் தானும்விரித்துக்கொண்டு
மன்னனைச்சுற்றிவந்து மாரடித்துத்தான்விழுந்தார்
கொற்றவனைச்சுற்றிவந்து கோவென்று அழுகலுற்றார்
மலையேபருவதமே வாட்டமில்லாக்குஞ்சரமே
செம்மலையேபருவதமே உனக்குச்சேதமில்லையென்றிருந்தேன்
மாண்டுமடிந்தாயோ வைகுந்தம்போனாயோ
செத்துமடிந்தாயோ சிவலோகம்போனாயோ
மாளவோயிங்குவந்தாய் மாபாவிபட்டணத்தில்
சாகவோயிங்குவந்தாய் சண்டாளன்சீமையிலே
உன்னைப்பரிகொடுத்து ஒருத்தியுமாய்ப்போவேனோ
மைத்துனர்க்கென்னசொல்வேன் மாமனார்க்கென்னசொல்வேன்
மன்னவனைச்சுற்றிவந்து மாதுபுலம்பலுற்றாள்
அழுதகுரலோசை ஆரணங்குகேட்டுவிட்டாள்
பவளக்கொடியாளும் பத்தினியாள்கேட்டுவிட்டாள்
ஆடலும்பாடலும் அத்தனையுங்கையமர்த்தி
ஆராதுதுவரோ அடர்ந்தவனந்தனிலே
பெண்குரலாய்க்கேட்கிறது போய்ப்பார்த்துவாருமென்றாள்
அழுதகுரலேது ஆராய்ந்துபார்த்துவாரும்
அப்போதுதாதியரும் அழகுள்ளமோகவதி
மோகவதியாளும் முன்னேவந்துதெண்டனிட்டாள்
தாதியருமங்கேவந்து சரணமிட்டாள்மாதருக்கு
மாதாசிசெலவருள க்ஷணத்திலொருதூதுவனும்

பவளக்கொடிமாதே பத்தினியேஎன்னுச்சி
ஆருெவொருத்தனவன் ஆளனுந்தேவியுமாய்
கதண்டுகொட்டிமாண்டாரென்று கன்னியவள்சொல்லுகிறுள்
புருஷன்மடிந்துவிட்டான் பெண்ணுள்புலம்புகிறுள்
அவனையெழுப்பிவிட்டால் அனந்தகோடிபுண்யமுண்டு
அவள்-ஆளனையெழுப்பிவிட்டால் அரிவைபற்குமோட்சமுண்டு

பவளக்கொடியாள் வந்துகாண்பது.

இந்தமொழிகேட்டு எழுந்தாள்பவளகன்னி
முத்துசிறப்பல்லக்கில் மொய்குழலுமேறிவந்தாள்
மாண்டவன் தன்னருகே வந்தயிரங்கினுள்காண்
அச்சுதாரந்தரென்னு மையர்புலம்புகிறுர்
பெண்போல்புலம்புகிறுர் பேசும்பெருமானும்
நான்பாருதகாடுமில்லை பணியாததீர்த்தமில்லை
மிதியாவனங்களில்லை முழுநாததீர்த்தமில்லை
தேசம்பலபலவாய் தீர்த்தங்களாடிவந்தேன்
பூமிபலபலவாய் பிரதட்சணம்செய்துவந்தேன்
பவளப்புதுமையிங்கே பார்க்கவந்தேன்மாதாவே
ஆனையின்மத்தகத்தை அறியுங்கதண்டுமிங்கே
குதிரைகளையறுக்குங் குளவியுண்டிவ்வனத்தில்
சிங்கத்தலைபிளக்குஞ் செங்குளவிகொன்றதுவே
அரியாமலிங்குவந்தோம் அரும்பாவிபட்டணத்தில்
தெரியாமலிங்குவந்தோம் செனத்துரோகிபட்டணத்தில்
இப்படிவருங்கருமம் யாதொன்றுநானறியேன்
மலையேபருவதமே வாட்டமில்லாக்குஞ்சரமே
செம்மலையேபருவதமே சேதமில்லாச்சுந்தரமே
கல்லானதூணேஉன்னைக் கரையானரித்ததுவோ
இரும்பானதூணேவுன்னை யிறைபானரித்ததுவோ
செம்பருந்துடன்னை சிறகாலடித்ததுவோ
என்று-மோதிரக்கைகளை முகத்தோடறைந்துகொண்டாள்
கோவென்றசத்தமுடன் குமரியழுகலுற்றுள்
தரையில்பிரண்டழுதார் தாரணியளந்தவரும்
பங்கயஞ்சேர்கண்ணுள் பவளத்தின்கன்னியரும்
ஆரடிபெண்ணேநீ அழுதுபுலம்புவதேன்
எந்தவூரெந்ததேசம் யெங்கிருந்துயிங்குவந்தீர்
மாண்டவர்யார்காணும் மாதேநீசொல்லுமென்றுள்

ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்வது.

பவளக்கொடியாளே பத்தினியேயென்னுச்சி
ஆனுல்கேளம்மா ஆரணங்குசொல்லுகிறேன்

ஊருண்டோளங்களுக்கு உற்றபதியுமுண்டோ
தேசந்திரிபவர்க்கு சீமைகள் பூமியுண்டோ
நாடுவடக்கேயம்மா நகரிதிருக்காஞ்சி
தேசம்வடக்கேயம்மா திருக்காஞ்சிமாநகரம்
தீவுபலதிரிந்து தீர்த்தங்களாடிவந்தோம்
பூமியொருபுரமா வெண்ணிதீர்த்தமாடிவந்தோர்
பவளபபுதுமையை பார்க்கவந்தோமென்தாயே
மாலையிட்டுக்கொண்ட மணவாளனிவர்காணும்
தாலிதரித்துக்கொண்ட தலைவனிவர்காணும்
வாலப்பிராயமம்மா வயதுபதினாறளவே
மார்பளவாய்முகமளவாய் வந்துநகதண்டுகளும்
மலைமுடியானை மன்னவனைக்கொன்றதம்மா
தாலிச்சரடிழந்து தலைவிரிக்கநாளாச்சே
எங்கேயோவானம் பிடிக்குதுயென்றிருந்தேன்
தப்பாதேவானந் தலையிலிடித்ததம்மா
அண்ணனில்லைதம்பியில்லை ஆதரிப்பாருமில்லை
அள்ளியிடுவார் அவனிதனிலாருமில்லை
இருவருமாய்வந்தோமே ஒருத்திநானபோவேனோ
உன்-புண்ணியமாய்போகுது பிழைக்கவழிபாருமென்றாள்
மங்கிலியப்பிச்சையது தாருமம்மாமாதாவே
உன்-தருமமாய்ப்போகுதம்மா தாயேமுகம்பாரும்
என்று-முந்தாணியேந்தி முன்னாலேநின்றாளே
மடிபிச்சைதாருமென்று மடியேந்திநின்றாளே
மாரிமழவுகொடுத்து மயங்கியழுதாளே
அவிந்தவிளக்கேற்றிவைத்தால் அநேகதர்மமுண்டுனக்கு
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாள்கேட்டு
இந்தப்-பாசாங்குகள்ளியை அப்பாலேதள்ளுங்கடி
என்று-மேகமலைமேலே யெள்ளநடந்துவந்து
அவன்காலைப்பிடித்துக் கரியமுடியசக்கி
பார்த்தாள் திருமுகத்தைப் பார்த்தாள்பலகாலும்
மேலேயிருக்கின்ற முக்காட்டைவாங்கியல்லோ
உற்றுற்றுப்பார்த்தாளே ஒளிபிறந்தகண்ணாளும்
வானவர்பெண்டுகளை வலதழிக்குங்கள்ளனடி
பட்டில்லாப்பெண்டுகளை வஞ்சமோசஞ்செய்தவனடி
தேசத்துமாதர்களை சிறையெடுக்குங்கள்ளனடி
புரட்டுங்கள்தாதிகளே பின்னழகைப்பார்ப்போமென்றாள்
தாமக்கருங்குழலாள் தாதிபுரட்டலுற்றாள்
முன்னழகும்பின்னழகும் முகத்திலச்சரேகைகளும்
தோளில்துளசிமாலை தொப்புளிலுயிர்தலசம்
பல்லிற்பராசவீணை பாதத்திலசெந்தாமரை

மீசைமுருக்கழகன் மைவிழியின்திருவழகும்
நாவுலேகட்சத்திரம் நயனவிழிபார்வைகளும்
பதினெட்டுலெட்சணமும் பார்த்தாளேபத்தினியாள்
தேவாதிபின்டமடி சுவாமிக்குமைத்துனண்டி
இவனைபெழுப்பினல் எனக்குவரும்மோசமென்று
பவளக்கொடியறுத்துப் பார்த்திபனைக்கட்டுமென்றாள்
அப்போதர்ச்சுனனும் ஆபனைத்தானினைந்து
வாள்விசயனர்ச்சுனனும் மாயவரைத்தான்பணிந்து
எப்படியோஉன்தயவு எம்பெருமாள்மேகவர்ணா
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
அரிராமமாமாயவரே அருகிருந்துகாருமையா
கட்டினதேயுண்டானல் கட்டவிழப்பாருமென்றான்
மனதில்நினைத்தானே வாள்விசயனர்ச்சுனனும்
பவளக்கொடியாலே பாங்கிமார்கட்டினர்கள்
ஆட்டுங்கொடிகளாறு கடுகவேயிற்றதக்கே
ஆனைகட்டுஞ்சங்கிலியால் அவனையேகட்டினர்கள்
ஆபன்தயவாலே அரிராமர்கிருபையினல்
அத்தையும்விம்மி அறுத்தானே அர்ச்சுனனும்
மார்பின்சரப்பளியை வாங்கியவன்கைகொடுத்து
கெட்டியாய்கட்டுமென்று கிட்டவந்துநின்றாளே
மாணிக்கச்சரப்பளியால் வறுத்திருக்கிக்கட்டினர்கள்
அவன்-காலையசக்குகிற கால்சேஷ்டைமெத்தவுண்டு
கையையசக்குகிற கைசேஷ்டைமெத்தவுண்டு
இங்கேயிருந்தாலே எனக்குவருமோசமென்று
பங்கயஞ்சி கண்ணாள் பவளக்கொடியாளும்
பல்லக்கின்மீதேறி பாங்கியர்சூழ்ந்துவர
மங்கையர்கள்சூழவே வந்திரங்கினாள்மண்டபத்தில்
வாள்விசயனருச்சுனனும் மாணிக்கச்சங்கிலியின்
கட்டையவிழ்த்தவனும் கடுகவெழுந்திருந்து
அச்சுதானந்த ரையரேயென்தோழா
ஆயிரந்தோழருக்கு அரிதாகியமணியே
கண்டீரோதோழரே கன்னியுடலட்சணத்தை
பார்த்தீரோவென்தோழா பவளக்கொடிலட்சணத்தை
இவளுக்கொப்பானேர் யாருமில்லைவையகத்தில்
ஈஸ்வரன்தேவி ஈஸ்வரியாளிமெல்ல
இராமரிடதேவி யிலட்சுமிஈமெல்ல
பிரமனிடதேவி சரஸ்வதிஈமெல்ல
எமனிடதேவி மோககன்னிஈமெல்ல
தேவேந்திரன்தேவி யிந்திராணிஈமெல்ல
சந்திரனர்தேவி ரோகணிஈமெல்ல

சூரியனார்தேவி சாயாதேவிஈடுமல்ல
கந்தருடதேவி கனகவள்ளிஈடுமல்ல
மன்மதன்தேவி ரதிமாதுஈடுமல்ல
ஆருடைய அழகுக்கு ஒப்பிடுவேனாரணங்கை
வேரிற்பவளமது மின்னுகிற காந்தியுண்டாய்
ஆயிரமின்னலிலே சோதிமின்னல்போல
கண்ணாலேபார்க்க முடியவில்லைநன்னியரை
எப்படிமறந்து இவளைவிட்டுநான்போவேன்
இறப்புக்கும்பிறப்புக்கு மினியொருபெண்வேணுமோ
இவளை-மாலைதரியாமல் வருவதொருநாளுமில்லை
இவளாலேயென் னுயிரும் இறக்கிறதுதப்பாது
அச்சுதானந்த ரையருந்தான்கேட்டு
ஏன்காணும்வாள்விசயா யிந்தமதியுந்தனுக்கு
தோள்மாலைபோட்டதொரு தோழிமார்தங்களிலும்
பாஞ்சாலன்பெற்றபெண்ணை பத்தினியைமாலையிட்டீர்
அவளிலுமெத்த ஆரணங்கிவளழகோ
எந்தனுதங்கை சுபத்திரையைமாலையிட்டீர்
அவளிலுமெத்த ஆரணங்கிவளழகோ
அகஸ்தியனார்பெற்றெடுத்த அருங்கிளியாள்போகவதி
அவளிலுமெத்த ஆரணங்கிவளழகோ
மேகம்பயின்றெடுத்த மின்னொளியைமாலையிட்டீர்
அவளிலுமிவளழகோ ஆனந்தவாழ்மார்பா
அல்லியரைப்பார்க்கிலு மிச்சமுண்டோயிவளழகு
வேண்டாங்காண்வாள்விசயா வெறுத்துவிடுமவளாசை
ஏழுலட்சந்தேவிமா ரெல்லோருந்தானிருக்க
மாதொருத்திக்காக மயங்கிவிழுவானேன்
காண்டாவனமெரித்த காளையவன்கூறுவான்
நீர்-என்னதான்சொன்னாலு மென்செவியிலேறாது
மாதந்தக்கன்னியரை மணமாலைசூட்டினாக்கால்
என்னுடையசீவன் மிருக்குங்காணென்தோழா
எண்ணப்படிமுடிக்க வேண்டுங்காணீஸ்பரரே
இருவருமாகவே யிருக்கிறவேளையிலே
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடிநாயகமும்
பொழுதுசரிந்தது போகவேணும்மாளிகைக்கு
மார்பின்சரப்பளியை வாங்கிவாதாதியென்றாள்
அப்போதுதாதிமார் அதிதுரிதமாகவந்து
ஆர்காணுமன்னவனே அழகானஐயாவே
ஆச்சியார்கட்டிவைத்த அழகுசரப்பளியை
கட்டிவைத்துபோனதை கடுகவேதாருமென்றாள்
பொழுதுசரிந்தது போராளரண்மனைக்கு

மார்பின்சரப்பளியை மன்னுகொடுத்திடென்றாள்
திட்டென்றெழுந்திருந்து தேர்விசயனே துரைப்பான்
உங்கள்-அலங்கங்களேறி குதித்தேனடி ஆரணங்கே
கோட்டைகளேறி குதித்தேனடிகொம்பனையே
அரண்மனையேறி குதித்தேனடி ஆரணங்கே
மேலேகுதித்தேனே பவளநல்லாள்கோட்டையிலே
பெட்டியெடுத்தேனே பொக்கிஷந்திருடினேனே
மாதவள்கையை வலியவந்துதொட்டேனே
கள்ளன்திருடனைப்போல் கன்னமிட்டுப்போனேனே
என்னகுற்றம்செய்தேனுன் என்னையவள்தானும்
கட்டழகிமாதவளுங் கட்டிவைத்துப்போனாளே
கள்ளனைப்போலாகக் கட்டவுந்நியாயமுண்டோ
திருடர்களைப்போலச் சேர்த்துக்கட்டநியாயமுண்டோ
கட்டினாள்தீருமோ கன்னியவளாசை
கட்டிவைத்தமாதென்னைக் காட்டில்விட்டுப்போகலாமோ
கூடவழைத்தல்லவோ போகவேணும்கொம்பனையாள்
அரண்மனைக்குளென்னை அழைத்துப்போகலாகாதோ
என்னசுதந்தரத்தில் என்னையவள்கட்டிவைத்தாள்
அம்மான்மகளென்று அன்பாகக்கட்டினாளோ
அத்தைமகளென்று ஆசையாய்க்கட்டினாளோ
அழகானகன்னியென்று மணமாலைசூட்டினேனே
வடிவானகன்னியென்று வாழ்மணஞ்செய்தேனே
என்னசுதந்தரத்தால் என்னையவள்கட்டிவைத்தாள்
கையிலகப்பட்டதை விடுவேனேகன்னியரே
மார்பின்சரப்பளியை மாதேகொடுக்கேண்டி
வலியவந்தபாக்கியத்தை விடுவேனேகன்னியரே
சண்டையதுவேண்டுமென்றால் சரியாகவாரேண்டி
அவளுக்குஅஞ்சுவேனே ஆனந்தவாழ்மார்பன்
என்றதுகேட்டு ஏதுசொல்வாள்தாதியவள்
உந்தனுக்குச்செய்த உபகாரமத்தனையும்
வேங்கைக்குச்செய்த விஷதாரியாச்சுதடா
மாண்டிடத்துமாண்டு மண்ணுளுத்துப்போகாமல்
எழுப்பிவிட்டதோஷமடா இத்தனையும்பேசுகிறாய்
ஆகடியம்பேசுதற்கு அடுக்குமோஉந்தனுக்கு
என்றதுசொல்லியே நடந்தாளிளங்கொடியாள்
வாயுவேகமாகவேதான் வந்தாளேமண்டபத்தில்
பவளக்கொடிமாதின் பாதத்தில்தெண்டனிட்டு
கைகட்டிவாய்புதைத்து கன்னியருமேதுரைப்பார்
மார்பின்சரப்பளியை மன்னவனைபோய்கேட்டேன்
என்னென்றுசொல்லி பிடிவிழுவான்சொன்னதெல்லாம்

பொழுதுசரிக்குது போகிறோமரண்மனைக்கு
மார்பின்சாப்பளிகை மன்னவனே தாருமென்றேன்
அவன்-வம்பானவார்த்தைகளு மிடம்பானபேச்சுகளும்
சட்டுறிவான்சொன்னசொல் ஏதென்று நானுரைப்பேன்
என்றுசொல்ல நாதியர்கள் ஏதுசொல்வாள்பவளக்கன்னி
அப்போதேசொன்னேன் தப்புவருமென்றுசொல்லி
அவனையெழுப்புவது ஆகாதுயென்றுசொன்னேன்
நமக்குவினையாச்சே நாம்சொன்னசொல்மெய்யாச்சே
வந்தன்சாப்பளி போனாலும்போகட்டும்
மாளிகைக்குப்போவோம் மாதேபயணமிடு
என்றவள்சொன்னவுடன் இளவிசயனருச்சுனனும்
அச்சுதானந்த ரையர்முகம்நோக்கி
என்னவடிவுதான் எடுக்கவென்றுயென்றே தோழா
அன்னத்தின்மேலே ஆசையுண்டோ தருக்கு
நீர்-வேடனைப்போலாக வேஷமெடுங்காணும்
என்னைவிலைகூறியே எடுத்துப்போகத்திறைமுன்
பார்த்தாசைபட்டல்லோ பரிந்துவிலைகேட்பாள்
ஆயிரம்பொன்னென்றுசொல்லி அவள்கையிலேநீகொடு
ஊருக்குநேர்கிழக்கே வியகர்கோவிலண்டை
அங்கேயோய்நீயிருங்காண் அச்சுதரேநான்வாரேன்
என்று-மாயன்பெருமானை மனதிலேநாளினைத்து
ஆயன்பெருமானை அப்போதினைத்தானே
எம்பெருமாள்மேவவந்து யேழுலகளந்தமாயா
முட்டையின்குஞ்சை முகமறியப்பாலகனை
பிட்டுவளர்த்தீரே பிரபலியமாகவென்று
மூக்காலேமுன்பொருக்கி முழுமரத்தில்கூடுகட்டி
சாக்கையின்குஞ்சுகளை கருதிவளர்த்தீரே
உன்னையேநம்பி வுயிர்கொண்டிலாவுகிறேன்
பவளக்கொடியைநான் மணமாலைசூட்டுகிறேன்
அன்னவடிவாக ஆண்டவனேநீர்கொடேன்றார்

ஸ்ரீகிருஷ்ணதேவர் அருச்சுனனுக்கு அன்னவடிவுகொடுத்தல்.

அருச்சுனன்தானிக்க ஆயனதுவரித்து
அன்னவடிவாக ஆயன்வரங்கொடுத்தார்
ஆனாலழகுமன்னன் அன்னத்தைப்போலானான்
செட்டையழகென்ன சிறுடையநெற்றியென்ன
காலினழகென்ன சாதுமடியழகென்ன
மூக்கினழகென்ன முனைமயிரும்பாவனையும்
கூவுங்குரலழகும் குயிலோசைபோலிருக்கும்
அருச்சுனராசனவன் அன்னவடிவானான்



ஸ்ரீகிருஷ்ணர் அர்ச்சுனனுக்கு அன்னவடிவு கொடுத்தல்.

## ஸ்ரீகிருஷ்ணதேவர் வேடவுருவெடுத்தல்.

அச்சுதானந்த ரையர்பெருமாளும்
காட்டுக்கிழங்கெடுக்குங் கனவேடன்போலானார்
கால்செருப்புந்தோல்குல்லாவும் கைதனிலேமான்வலையும்
பணைநீகுத்தும்பல்லயமும் பாரிசமுங்கைப்பிடித்து
கோட்டைவிட்ட துப்பாக்கி குண்டுகுழல்கைப்பிடித்து
கருநாயுஞ்சங்கிலியும் கைதனிலேதான்பிடித்து
அன்னத்தையேந்திக்கொண்டு அவன்வாரான்கானகத்தில்
பவளக்கொடியாள் பத்தினியாள் தானிருக்கும்
மண்டபத்துவழியாக வருகிறான்வேடனவன்
ஆனைக்குந்தோழிமார் அன்னத்தைத்தான்பார்த்து
ஆரடாவேடுவனே அன்னத்தைவிற்கிறவன்
விற்கிறையோநீசொல் வேண்டியபொன்தாரேனென்றாள்
அப்படியேநல்லதென்று அழகுள்ளவேடன்சொல்ல
ஓடியேவந்தார்கள் உத்தமிமுன்தாதியர்கள்
ஆரோஒருவேடன் அன்னத்தைவிற்கிறான்
அன்னத்தைப்பார்த்தால் அழகாயிருக்குதம்மா
கண்ணிட்டுப்பார்க்க காணமுடியாது
வைத்துவளர்க்கலாம் வாங்குமம்மா ஆச்சியென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அன்னநடைமாது
அந்தநல்லவேடுவனை அழைத்தோடிவாருமென்றாள்
ஓடினாள்தாதியரும் ஒருகொடியில்வேடனண்டை
ஆரடாவேடுவனே ஆச்சியழைக்கிறாள்
அன்னத்தைக்கொண்டுவாடா அழகுள்ளவேடுவனே
என்றதுசொல்லையிலே இசைந்துவழிநடந்து
பவளக்கொடியாள் பத்தினியாள்முன்னேவந்தாள்
கண்டாள்பவளநல்லாள் கட்டழகியன்னமதை
என்னப்பாவேடுவனே என்னவிலைசொல்லுமென்றாள்
ஆயிரம்பொன்கொடுத்தால் அன்னம்தருவேனென்றான்
அன்னத்தைவாங்கி அழகாய்மடியில்வைத்தாள்
மூங்கிலருச்சுனனும் முன்னேமார்பில்குத்தலுற்றான்
மார்பின்ஸ்தனத்தையவன் வாயால்பிடித்திழுப்பான்
முகத்தோடேமுகமணைப்பான் முத்தங்கொடுத்திடுவான்
பவளக்கொடியாளும் பத்தினியேதுசொல்வாள்
என்னடாவேடுவனே இப்படிமேல்விழுகிறது
ஆயிழையாள்தங்கை அவள்வளர்த்த அன்னமிது
பெண்டுகளென்றால் பிரியமாய்மேல்விழுமே
ஆசையாய்முத்தமிட்டு அணைத்துவிளையாடும்
சீராய்வளர்த்திடென்று சொல்லிவழிநடந்தான்

அடி-போசனங்கள்கொண்டுவாடி யென்றாளேபொற்கொடிய
மாம்பழம்பலாப்பழம் வாழைப்பழங்களும்
கரிவாழைசெவ்வாழை காட்டுவிளாம்பழமும்
கொண்டுவந்துவைத்தார்கள் கொம்பனையாள்முன்பாக
அன்னத்துக்குவூட்டியே ஆவல்தெளியவைத்து
ஆரடிதாதிகளே அழையுங்கள்தச்சனைத்தான்
ஈழத்துதச்சனை இட்சண்மேயழையுமென்றாள்
ஓடினார்தாதியர்கள் ஒருநொடியிலிட்டுவந்தார்
வந்துபணிந்தானே வரிசையுள்ளதச்சனவன்
என்னையழைத்தது ஏதுகருமமென்ன
அன்னமிதுதானிருக்க அழகுகூண்டுபண்ணுமென்றாள்
சொன்னளவில்தச்சனவன் சீக்கிரத்திற்சொப்பனிட்டான்
சோடித்துவைத்தவனுந் தெண்டனிட்டுபோய்நடந்தான்
அன்னத்தைதானெடுத்து ஆவலுடன்முத்தமிட்டு
கூண்டிலடைத்தவளுங் கொம்பெண்வேதானெழுந்தாள்
ஏறினாள்பல்லக்கில் எடுத்தார்நெடுங்குடைகள்
பக்கம்நிறைந்தார்கள் பாங்கிகளுந்தோழிகளும்
சுத்திநிறைந்தார்கள் தோழிகளுமூப்பிகளும்
ஆனையின்மேல்பேரிகை அடிபடுதோசையுடன்
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைமுழங்குது
மேளதாளந்தான்முழங்க மொய்குழலும்வாராளே
காடுகடந்து கரியமலைதான்கடந்து
வனமாய்வனங்கடந்து வாழ்மனைக்குவாறாளாம்
தெத்துகடந்தாள் தெருவீதிதான்கடந்து
கடையுங்கடைத்தெருவுங் கருமாரதிவீதிவிட்டு
அங்காடிவீதி அரண்மனையுந்தான்கடந்து
மாடத்தெருவீதி மயிலணையுந்தான்கடந்து
கோபுரவாசலண்டை கொம்பனையாள்வந்துநின்று
மாளிகையுள்ளே நுழைந்தாள்கொலுமண்டபத்தில்
சிங்காரமண்டபத்தில் தேன்மொழியாள்போய்ச்சேர்ந்தாள்
அந்திநேரமாச்சுது ஆதித்தன்போய்மறைந்தான்
பொழுதுமறைந்தது போதவிருளாச்சு
ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
அன்னத்தைக்கொண்டவிலை அறிவீர்சன்தாதியரே
மாடத்தில்கூடத்தில் கட்டாதேமங்கையரே
நற்பவளத்தூணு நடுவாகக்கட்டுமென்றாள்
சலவைமாமண்டபத்தில் தான்வைத்துகட்டலுற்றார்
பாரித்திருப்பானே பாரமேத்ததோணுகைக்கு
அடி-அக்கமாரேதங்கைமாரே அன்னமெத்தபாரமது

மஞ்சமலங்கரித்து மண்டபத்துசங்கிலியாய்
வைத்திழுத்துகட்டினார்கள் மன்னவரருச்சுனரை
பவளக்கொடியாளுடைய பஞ்சணையின்மேலாக
நற்பவளத்தூணருகில் நலமாகக்கட்டினார்கள்
பவளக்கொடியாளும் பத்தினியாளப்போது
தீர்த்தங்கள்வாங்கியே திருவாய்முகங்கழுவி
போசனங்களுண்டு பொடியள்ளிகைதுவட்டி
பஞ்சணைமெத்தை படுக்கையறைசோடியென்றாள்
கடுகயெழுந்தார்கள் கட்டழகிதாதியர்கள்
கண்மூனறுடைய கனவயிரக்கட்டிலிட்டு
மெத்தைமடித்திட்டு மேலேயணைகோலி
காமபரிந்தஜுங்கலப்பூ கட்டிலின்மேல்பரப்பி
கால்கோட்டைகைகோட்டை இட்டந்தகாரிழைக்கு
ஒருகுதலைக்காணி ஒய்யாரபஞ்சணையாம்
தங்கத்தலைக்காணி சகலாத்துதழுவணையும்
அன்னவுஞ்சல்மேலே அழகாகசோடித்தார்
அத்தர்புனுகுகளை அள்ளித்தெளித்தார்கள்
கதம்பகஸ்தூரிகளைக் கரைத்துதெளித்தார்கள்
சந்தனமுங்குங்குமமுஞ் சவ்வாதுதான்தெளித்து
சாம்பிராணிவாடைகளும் சந்தனப்புனகமொடுத்தார்
பஞ்சணைமெத்தையண்டை தம்பலவட்டில்வைத்தார்
காச்சாகளிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
ஆரங்கிபாக்குகளு மோரங்குவெற்றிலையும்
வாகாயிலைச்சுருளும் வர்ணத்துவர்பாக்கும்
கொற்றுத்துவர்பாக்கும் கோவையிலைச்சுருளும்
முத்துசுட்டசுண்ணும்பு மொய்குழற்குவைத்தார்கள்
கெண்டிகையில்நீருங் கொண்டுவந்துவைத்தார்கள்
குத்துவிளக்கு குடவிளக்குமேத்திவைத்தார்
மாடவிளக்கு மயில்விளக்குமேத்திவைத்தார்
ஆயிரம்பெருவிளக்கு வாசலிலேற்றிவைப்பார்
சோடித்தோமென்றுசொல்லித் தேன்மொழிமார்தெண்டனிட்டார்
அப்போ-பவளக்கொடியாளும் பத்தினியாள்தானெழுந்து
வாசல்பதினெட்டுங் காக்கிறதாதியர்கள்
பத்திரங்காவலென்று பஞ்சணையிற்போயிருந்தாள்
பள்ளியறைச்சாலையிலே பைங்கிளியும்போய்நடந்தாள்
காயாரக்காய்த்த கமுகினிளம்பாக்கும்
வாயாரத்தின்றவளும் மலரணையிற்பள்ளிகொண்டாள்
நிமிசாபெரியலகு கேரிசமாம்பெரியகத்தி
மந்திரவாளுருவி மார்மேலேசாத்திகொண்டாள்
பவளக்கொடியாளும் பள்ளிகொண்டாளப்போது

அங்கங்கேதாதியர்கள் அனைவோரும்பள்ளிகொண்டார்

## அருச்சுனன் அன்னவடிவைவிட்டு தன்சுயரூபமாகுதல்.

அனந்தல்கெடுநாழி சென்றபிறகாக
ஆணழகனருச்சுனனும் ஆயனைத்தானினைந்து
மாயன்பெருமானை மனதிலேதானினைந்து
கூட்டைத்திறந்தவனும் கொப்பெனவேரூபமானான்
அன்னவடிவைவிட்டு ஆண்ரூபமானனே
பொல்லாதகாதல் புலம்புகுதுகெவுளியது
வன்குரலில்பல்லியது வலபுரமாய்சொல்லுகுது
எழுப்பியகாதலும் எண்ணியவள்பார்த்தளவில்
ஆள்வருத்தாகவே சொல்லுகுதுஇக்கெவுளி
அடுத்தடுசொல்லுவதும் ஆள்வருத்தாய்கானுகுது
இத்தனைநாளாக இல்லாதகெவுளியது
ஒருநாளுஞ்சொல்லாத வுச்சிதமாய்ச்சொல்லுகுது
காட்டிலிருந்தவர்கள் கள்ளரோநானறியேன்
ஆயாசப்பட்டவளும் அழுதாற்போலேயிருந்தாள்
பின்னுமரைநாழி பொறுத்தபிறகாக
பொல்லாதகாதல் எழும்பிற்றுபொற்கொடிக்கு
எழுப்பியகாதலை எண்ணியவள்பார்ப்பளவில்
அடுத்தடுத்துச்சொல்லுவதும் ஆள்வருத்தாய்கானுவதும்
எண்ணிமனங்கலங்கி இளங்கொடியாளேதீசொல்வாள்
ஆடிகாதிநகளே வல்லங்காரச்செங்கமலம்
பஞ்சணைமேலாக பாங்கியரேபள்ளிகொண்டாள்
ஒருநாளுஞ்சொல்லாத வுச்சிதக்கெவுளியது
வலப்புறத்துப்பல்லி வலபுறமாய்சொல்லுதடி
கெவுளியின்சாஸ்திரத்தை ஆராய்ந்துபாரடீ
என்றதுகேட்டவுடன் இளங்கொடியாள்தாதியர்கள்
அவளறிந்தசாஸ்திரத்தை ஆராய்ந்துபார்க்கலுற்றாள்
ஆள்வருத்தாய்கானுகுது ஆச்சியரேஎன்னசொல்வேன்
ஆரோதெரியாது ஆள்வருத்தாய்கானுகுது
அவ்வார்த்தைகேட்டுமவ ளாரணங்கேதுரைப்பாள்
வாசல்பதினெட்டு காத்திருக்குமந்திரிகள்
பத்திரமாகவே காத்திருங்கள்பைங்கிளியே
எச்சரிக்கையாகவே இருங்களடிகாவல்
தப்பிதமுண்டானல் தலையைத்தரித்திடுவேன்
காவலுடையவர்க்கு கட்டுதிட்டம்பண்ணினாள்
பவளக்கொடியாள் பத்தினியாள்சொற்படிக்கு
பதினெட்டுவாசலுள்ளோர் பத்திரமாய்க்கார்க்கலுற்றார்
அன்னவுஞ்சல்மேலாக ஆரணங்குபள்ளிகொண்டாள்
பின்னுமொருநாழி பொறுத்தபிறகாக

காண்டாவனமெரித்த காளையெழுந்திருந்து
எப்படிக்குஇவளுடனே இணங்கிமருவிடுவேன்
என்று-மூச்சைபிடித்தவனும் விளக்கையணைத்துவிட்டான்
கொம்பனையாள்மெத்தையிலே மணிகளசைந்ததுகாண்
பொட்டெணவேகண்சிவந்து பார்த்தாளேபொற்கொடியும்
மந்திரவாளாலே வீசினாள்மாதுகன்னி
முன்லாகையாகாமல் பின்லாகையால்குதித்தான்
நற்பவளத்தூணு நடுவாகயிற்றுதங்கே
வெட்டவிழுந்தது வீரமணிவாளாலே
பவளக்கொடியாளும் பத்தினியாளேதுசொல்வாள்
வானவர்களானக்கால் என்வாள்முனைக்குத்தப்பிடுவார்
மனுஷருமானக்கால் மாண்டுமடிந்திடுவார்
என்றதுசொல்லி இளக்கொடியாள்தான்பார்த்தாள்
பின்னுமொருநாழி பொறுத்தபிறகாக
ஆனந்தமார்பனவன் அருச்சுனராசதுரை
நித்திரைவேளையோ. ருசாவுறக்கமோ
மஞ்சத்தைதான்பிடித்து மன்னனசைத்துவிட்டான்
அரைவடமுங்கிண்கிணியு மணிகளசைந்ததுகாண்
மஞ்சம்புரண்டது மணிகளசைந்ததுகாண்
வேல்பொருதுங்கண்ணாளும் வீசனுற்றாளந்நேரம்
விசினவாளுக்கு வேந்தனருச்சுனனும்
முன்லாகையாகாமல் பின்லாகையால்குதித்தார்
நற்பவளத்தூணு நடுவாகயிற்றதுகாண்
கண்விழித்துப்பார்த்தாளே கட்டழகிமாதுகன்னி
காட்டிலிருந்த கள்ளன்திருடனோ
வானவர்கள்தேவரிங்கு வந்தாரோநானறியேன்
மஞ்சம்புரளுவதேன் மணிகளசைவானேன்
வானவர்கள்தேவரென்றால் என்வாள்முனைக்குதப்பிடுவார்
ஆள்ரூபமானால் அவர்பிழைக்கபோறதில்லை
ஏரெடுத்துப்பார்த்தாளே இளங்கொடியருச்சுனனை
மன்னனமுதுகிலே மச்சரேகைகண்டாளே
அப்போவிசயன் அருச்சுனனுமேதுரைப்பான்
உன்வாசலுக்குவானவர்கள் தேவரும்வருவாரோ
நான்-தேவாதிபிண்டமடி தேர்விசையனர்ச்சுனனடி
பேர்பெற்றுடைய பெருமாளுடமைத்துனனடி
மாயன்பெருமாளுக்கு மைத்துனன்நான்தானடி
என்று-பல்லொளிவைக்காட்டினான் பவளக்கொடியாளுக்கு
சோர்ந்துதியங்கியவள் சோரணைதப்பிகீழ்விழுந்தாள்
ஆணழகுமன்னன் அர்ச்சுனன்தானெழுந்து
சாயமணிக்கவரி சந்தனத்தாலாலிவத்தி

வீசினன்கலைதெளிய வெண்சாமரைக்கவரி
கற்பழியாக்கன்னியரும் கற்பழிந்துபோனாளே
கற்பழிந்துபோனேனென்று கன்னிபுலம்புகிறாள்
அப்போவிசயன் அர்ச்சுனனுமேதுசொல்வார்
நீதானேகற்பழிந்தாய் நேரிழைநாயகமே
கற்பழிந்தமாதர்களை கன்னியரேசொல்லுகிறேன்
தீயிற்பிறந்தவளும் தெண்டனிட்டான்பாவையரும்
மேகம்பயின்றெடுத்த மின்னொளிநாயகமும்
பார்மண்டலமாளும் பார்ப்பான்மடந்தையரும்
நாகம்பயின்றெடுத்த நறுநுதலாள்கன்னியரும்
அச்சுதன்தங்கையவள் ஆரணக்குசுபத்திரையாள்
மகுடத்துரைச்சியவன் வாழ்வரசியல்லியரும்
நான்-கற்பழித்தமாதர்கள் கணக்குமிதங்களில்லை
என்றதுகேட்டு இளங்கொடியாளேதுசொல்வாள்
எத்தேசகாலமும் இதுவேதொழில்தானோ
எப்போதுமெந்தனுக்கு இதுவேதொழில்தாண்டி
குருகுலவம்மிஷத்தில் குந்திவயற்றிலே
ஐவருடன்பிறந்தேனனந்தவாழ்மார்பன்
அவனிமுழுதும் ஆளுகிறார்தருமலிங்கம்
நான்-தேவிகளைக்கொள்கிறதுஞ் செல்வரைப்பெருகிறதும்
இதுவேதொழிலாக இருக்கிறேனேந்திழையே
மன்னவருந்தேவியரும் மனதுவுறவானபின்பு
உன்மேல்மயலாகி உள்ளமுருகுதடி
அன்னவடிவுதான் கொண்டேனே ஆரணங்கே
வேடனார்கைதனிலே விலையாகக்கண்டாயோ
அதினாலுஞ்சாடை யறியாமற்போனாயடி
என்-மூக்கினாலுன்மார்பை குத்தினேன்மங்கையரே
உன்—மார்சதையைக்குத்தி வலித்தேனடிமங்கையரே
அத்தாலுஞ்சாடை யறியாமற்போனாயடி
ஆளானுந்தேவியுமாய் அக்காட்டில்தானிருந்தேன்
கதண்டுகொட்டிசெத்தவனைப் போலாகநானிருந்தேன்
பவளக்கொடியருத்து கட்டிவைத்தாய்பத்தினியே
கட்டுக்கொடியை யறுத்தேனடிமங்கையரே
அத்தாலுஞ்சாடை யறியாமற்போனாயடி
ஆனைகட்டுஞ்சங்கிலியா லாரணங்கேகட்டிவைத்தாய்
சங்கிலியைநானறுத்துப் போட்டேனேதையலரே
அத்தாலுஞ்சாடை யறியாமற்போனாயடி
உன்—மார்பின்சரப்பளியால் லரிந்தென்னைக்கட்டிவைத்தாய்
உன்-தாதியரையேனுப்பி வாங்கிவரச்சொன்னாயே
சொல்லாதவார்த்தையெல்லாஞ் சொல்லியனுப்பினேனடி

உன்னை-திட்டியனுப்பினண்டி தீங்காகச்சொன்னேனண்டி
அத்தானுஞ்சாடை யறியாமற்போனையடி
அன்னவடிவு எடுத்தேனே ஆரணங்கே
வேடனார்கொண்டுவா விலைகொடுத்துவாங்கினையே
உன்-முத்துஸ்தனத்தைநான் ருத்திவலித்தேனே
மார்பின்சதையை வலித்தேனடிதையலரே
அத்தானுஞ்சாடை அறியாமற்போனையடி
வேடனைப்போலாக வந்தவனுமென்தோழன்
அன்னத்தைக்கொண்டுவந்து அரண்மனையிற்கட்டிவைத்து
பவளக்கால்மண்டபத்தில பத்தினியே்கட்டிவைத்தாய்
அன்னவடிவைவிட்டு ஆள்ரூபமானேனண்டி
பஞ்சணைமெத்தையை அசைத்தேன்மணியசைய
அத்தானுஞ்சாடை யறியாமற்போனையடி
உனக்கு-அழகேபெரிதுகண்டாய் ஆண்மைகள்போதாது
மருட்டத்துரைச்சியவள் வாழ்வரசியல்லிநல்லாள்
அல்லியவளுடைய ஆண்மையுனக்கில்லையடி
இவையெல்லாஞ்சொல்லியே சிரித்தானிளவிசையன்
பவளக்கொடிமாது பத்தினியாளேதுசொல்வாள்
தோழருநீருமாய் வந்தேனென் நீர்சுந்தரரே
அருகேவந்ததோழரவர் ஆணழகர்பெங்கேயென்றாள்
ஊருக்குஅப்பாலே பிள்ளையார்கோவிலண்டை
பிள்ளையார்கோவிலண்டை யிருக்கிறாரென்தோழர்
அவரையழைத்துவா ஆணழகாதோழரைத்தான்

பவளக்கொடியாள் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியையழைத்துவா
அர்ச்சுனராசனையனுப்புதல்.

என்றதுகேட்டு இளங்கொடியேநான்போவேன்
எந்தவழியாக இளங்கொடியேநான்போவேன்
சுரங்கத்துக்குள்ளாகச் சுருக்காய்நடவுமென்றாள்
அப்படியேநல்லதென்று அர்ச்சுனனுந்தானெழுந்து
சுரங்கத்துக்குள்ளாக சுருக்காய்நடந்தானே
கோட்டைகடந்தானே கொத்தளமுந்தான்கடந்து
பிள்ளையார்கோவிலண்டை போரானேவாள்விசையன் ▪

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அர்ச்சுனராசனை நினைத்துப்புலம்பல்.

அச்சுதானந்த ரையர்புலம்புகிறார்
ஆருயிர்தோழனே அர்ச்சுனனேயென்னசெய்வேன்
உன்-அண்ணர்தர்மராயரும் அனுப்பினாரென்பிறகே
இருவருமாகவே இருந்தோநீவுதனில்
உனையிழந்துநான் ஊர்வழியேபோவேனோ
மாதர்மேலாசையை மயக்கமெடுத்தீரே

அவளை-கூடியணையிலே காவலர்கண்டாரோ
பார்த்தர்பெருமாளே வுன்பதட்டமறிவேனே
நீகட்டியணையயிலே காவலர்கண்டாரோ
உன்னை-கட்டிப்பிடித்தாரோ காவலிலேவைத்தாரோ
அவளைக்-கூடியெழுந்திருக்க கோடிபேர்வந்தாரோ
வெட்டியெறிந்தாரோ வீரமணிவாளாலே
உத்தமவீரியனே உயிர்க்கழுவில்வைத்தாரோ
நீமாண்டுமடிந்தாயோ உன்வயிரம்சிந்தினதோ
மன்னர்பெருமாளுக்கு வாட்டங்களுண்டானல்
சந்தனவடிவழகர் தர்மருக்கேதுசொல்வேன்
வெற்றிமதயானை வீமருக்கென்னசொல்வேன்
ஈரல்புகுந்த யிரட்டையருக்கென்னசொல்வேன்
தோராவடிவழகி துரோபதைக்கென்னசொல்வேன்
மந்தாரக்குந்தியற்கு மாதாவுக்கென்னசொல்வேன்
அவர்-அங்கேபிழையாரே ஆணழகாயென்னசொல்வேன்
காணவும்போறேனே காண்டீபங்கொண்டவனே
பாண்டிப்பெருமானை பார்க்கவும்போரேனே
என்றசொல்லிமாயவரும் ஏங்கிப்புலம்பலுற்றார்
அந்தசமயத்திலே அங்குவந்தான்வாள்விசையன்
ஏன்காணுமச்சுதரே ஏங்கிப்புலம்புகிறீர்
என்-சமர்த்துகளும்சேவகமும் தாழ்வாகப்போறதில்லை
எந்தவிதத்தாலும் ஈடழித்துநான்வருவேன்
என்றதுகேட்டப்போ ஏதுசொல்வார்மாயவரும்
என்னவடிவாக யிருந்தீரவளுடனே
அன்னவடிவாக அவளுடனேசேர்ந்தீரோ
ஆள்ரூபமாகி அருங்கிளியைச்சேர்ந்தீரோ
மனிதரூபமாகி மாதனைச்சேர்ந்தீரோ
என்னவடிவாக யிருந்தீரவளுடனே

அருச்சுனன் பவளக்கொடியாள் சேதியைச்சொல்லல்.

என்றதுகேட்டுமப்போ இளவிசையனேதுசொல்வான்
அல்லகாணச்சுதரே ஐயர்பெருமாளே
அன்னவடிவாக இருந்தேனவளிடத்தில்
பவளக்கால்தூணிலே பத்தினியுங்கட்டிவைத்தாள்
பஞ்சணைமெத்தையிலே பள்ளிகொண்டாள்பத்தினியும்
அர்த்தராத்திரிவேளையிலே நானெழுந்தேனச்சுனரே
அவள்-நித்திரைசோதித்து நினைவழியவேணுமென்று
அன்னவுஞ்சல்தன்னைநா னசைத்துவிட்டேனப்பொழுது
அசைத்துவிட்டேனப்பொழுது அவள்கையில்வாளுருவி
முன்லாகையாகாமல் பின்லாகையாய்குதித்தேன்
மனிதரூபமானுக்கால் வாள்முனைக்குதப்பார்கள்

தெய்வரூபமானுக்கால் திரும்பிப்பிழைத்திடுவார்
வந்தவராரென்று வாய்மொழியைக்கேட்கலுற்றாள்
நான்-தேவாதிபிண்டமடி தேர்விசயனருச்சுனண்டி
பேருல்புகழ்பெற்ற பெருமாளவர்மைத்துனனண்டி
மாயன்பெருமாளுக்கு மைத்துனன்நான்தாண்டி
இவ்வார்த்தைநான்சொன்னே னிளங்கொடியாள்மாதருக்கு
பல்லொளியைநான்காட்டிப் பார்த்துநகைத்திட்டேன்
கண்டுமயங்கிவிட்டாள் கட்டழகிகன்னியவள்
சோபித்துதான்களைத்தாள் தோகையிளங்கொடியும்
கூடிமறுவினேன் குங்குமச்சாலையிலே
மருவிப்பிரிந்தேன் மாதருறவானேனே
உம்மையழையுமென உத்தாரம்பண்ணிவிட்டாள்
அவள்மாளிகைக்குப்போக வாருங்காணச்சுதரே
அப்படியேஅர்ச்சுனரும் ஆணழகரிருவருமாய்
சல்லடந்தான்தொடுத்து தட்டிவரிந்துகட்டி
தட்டியின்மேலொட்டியாணம் சதுராய்வரிந்துகட்டி
முத்தினுருமாலை முகமிலங்கக்கட்டினார்கள்
சட்டைதமானுகளும் தரித்தாரழகுபெற
பொன்முத்துப்பட்டாடை போத்தினர்மேலாக
அப்போதருச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்
அச்சுதானந்த ரையரேயென்தோழா
சரப்பளியும்பொன்மூட்டையும் எடுத்துக்கொண்டுவாருமென்றார்
அப்படியேயச்சுதரும் அழகுமூட்டைதானெடுத்து
இருவருமாகவே இசைந்துவழிநடந்தார்
சுரங்கத்துவழியாக துருசாகப்போய்நடந்தார்
பவளக்கொடியாள் பத்தினியாள்கோட்டையிலே
உள்வாசல்போய்நுழைந்தார் உத்தமவீரியர்கள்
அவள்-சிங்காதனத்துக்கு முன்பாகவந்துநின்றார்
வந்தவரைக்கண்டானே மாதுயிளங்கொடியும்
பத்தியுடன்புத்தியுடன் பாதஞ்சரணமென்றாள்
கொண்டுவந்தமூட்டையைக் கொற்றவனார்கீழேவைத்து
கொம்பனைக்கெதிரேவந்து கொற்றவர்கள்தானமர்ந்தார்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
அப்போ-வேல்பொருதுங்கண்ணாளும் வேந்தர்களைத்தான்பார்த்து
உங்களிருவருக்கும் இதுவேதொழில்தானோ
எங்களிருவருக்கும் இதுவேதொழில்தானென்றார்
மூட்டையென்னவென்றுசொல்லிக் கேட்டாளிளங்கொடியும்
அப்போஅச்சுதானந்த ரையருமேதுசொல்வார்
அர்ச்சுனர்முன்னாலே அன்னவடிவெடுத்து
உன்கொலுமுகச்சாவடியில் கொம்பனையேமுன்னேவந்து

அவர்-ஆடலும்பாடலும் அதிசயத்தைநீபார்த்து
அன்னமென்றுசொல்லி ஆரணங்கேநான்பிடித்து
வேடனுமாக விலைகூறிவந்தேனே
என்னவிலையென்று இளங்கொடியேநீகேட்க
ஆயிரம்பொன்னென்று ஆரணங்கேசொன்னேனே
நீ-அன்னமொருதட்டும் பொன்னொருதட்டுமாக
பொற்கொடிநீகொடுத்த பொன்னூட்டைஅம்மாயிது
காண்டீபனருச்சுனனை கானகத்தில்கட்டிவைத்த
உன்-மார்பின்சரப்பளியை மாதாவேயிந்தாவென்று
கருநீலப்பூங்குழலாள் கையிலேதான்கொடுத்தார்
அப்போதுபெண்மயிலா ளவர்கையிற்றான்வாங்கி
பொங்கிமனங்குளிர்ந்து பொற்கொடியாளப்போது
மெத்தவிளப்பா யிருக்கிறீர்வேந்தர்களே
போசனங்களெங்கேயென்றாள் பொற்கொடியாளிளங்கொடியும்
அப்போஆயர்பெருமாளும் அரிராமர்தான்கேட்டு
அல்லியிடத்தில் அங்கேபுசித்ததுதான்
மூன்றுநாளாச்சுது மெல்லியரேநான்பொசித்து

பவளக்கொடியாள் ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கும்
அருச்சுனனுக்கும் விருந்திடல்.

இவ்வார்த்தைதான்கேட்டு இளங்கொடியாள்தானெழுந்து
அவளாக்கப்பதமறியா ளரிசிபதந்தானரியாள்
அப்படிப்பட்ட ஆரணங்குமப்போது
பட்டாடைதான்வாங்கிப் பாவாடையுள்ளுடுத்தி
அடிசில்சமைக்க ஆரணங்குதானினைந்து
பாண்டத்தைக்கழுவி பனிநீருலைவார்த்து
சின்னசம்பாதன்னரிசி தீட்டியுலையிலிட்டாள்
முத்துபோல்சாதம் வடித்தாளிளங்கொடியாள்
நந்தியெனும்பூசனிக்காய் நாலுவிதக்கறிசமைத்தாள்
வாழைக்காய்பொரியலிட்டாள் வழுதலங்காய்தான்குழம்பு
பீர்க்கங்காய்பொரியலிட்டாள் புடலங்காய்தான்பொரியல்
கத்திரிக்காய்தான்பொரியல் கருணைபுளிக்குழம்பு
கொத்தவரைக்காய்கள் குலையோடேபொரியலிட்டாள்
பாவக்காய்பச்சடியும் பயிற்றங்காய்பொரியலிட்டாள்
அத்திவிறகொடித்து தித்திக்கப்பால்காச்சி
புத்துருக்குநல்லநெய்யும் பொன்போல்பருப்புகளும்
அதிரசமுந்தேன்குழலும் அறுசுவைபதார்த்தங்களும்
பத்துவிதக்கறியும் பதினெட்டுபச்சடியும்
எட்டுவிதக்கறியும் இயலானபோசனமும்
ஆயிரத்தெட்டு அரிக்கரியும்பொரிக்கரியும்

கடுகச்சமையலிட்டாள் கன்னியிளமயிலும்
ஆச்சுதுபோசனங்கள் அமுதுண்ணவாங்களென்று
பாளையும்நூலையும் பக்குவமாய்கைகொடுத்தாள்
பாளைகொண்டுபல்விளக்கி நூலைகொண்டுநாவழித்து
தீர்த்தநீர்வாங்கி திருமுகமுஞ்சுத்திசெய்து
வசந்தநீர்வாங்கி மதிமுகமுஞ்சுத்திசெய்து
பூசைபண்ணுமண்டபத்தில் புண்ணியர்கள்வந்துநின்று
வாழையிலைபோலே வழித்திட்டார்வெண்ணீறு
கோவையிலைபோலே குழைத்திட்டார்வெண்ணீறு
பூசைமுடித்து புகழ்வேந்தர்வீரியரும்
போசனமண்டபத்தில் புண்ணியர்கள்வந்திருந்தார்
வட்டமணைபோட்டார்கள் வந்தவர்களிருவருக்கும்
வட்டமணைமீது வந்தமர்ந்தாரிருவருமாய்
வாழையிலைபோட்டு வட்டித்தாள்சாதமது
சுத்திகரியும்வைத்தாள் தோல்கயிளங்கொடியாள்
அள்ளிபருப்பையிட்டா ளதுகொண்டுநெய்வார்த்தாள்
குளிர்ந்தசலம்வெந்நீருங் கச்சாயங்கனிவர்க்கம்
இத்தனையுந்தான்படைத்து வந்திழையாளப்போது
உண்ணுங்களென்று உபசரணைசெய்யலுற்றாள்
போசனங்களுண்டு பொடியிட்டுகைதுடைத்து
சிங்காதனத்திலே தேர்விசயன்வீற்றிருந்தான்
காச்சாக்களிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
ஆரங்கிபாக்குகளும் மோரங்கிவெற்றிலையும்
அள்ளிக்கொடுத்தாளே ஆரணங்குயிருவருக்கும்
பவளக்கொடிமாது பத்தினியாளேதுரைப்பாள்
ஆயரே அச்சுதரே அண்ணாவேநீர்கேளும்
சேரும்புராசாக்கள் செய்தபெருந்தவத்தால்
பவளக்கொடிமேலே பத்தினியாள்பெண்பிறந்தேன்
பதினறுவருஷமாக பட்டமரசாண்டேன்
கொள்ளவருவார்கள் கோடானகோடியுண்டு
மாலையிடவந்தவர்கள் வர்ணலட்சங்கோடியுண்டு
நாண்மாலைதரியாமல் மணமாலைசூட்டாமல்
நித்யகன்னியாகவே யிருந்தேனிந்நாள்வரைக்கும்
அருச்சுனராலே யழிந்துதேயென்தவங்கள்
பத்தினிசபதமது பாழாய்முடிந்துதே
எந்தன்விதிப்பயனை எதென்றெடுத்துரைப்பேன்
கதியைத்தலைக்கவல்லேன் காவேரிநீந்தவல்லேன்
என்விதியைத்தலைக்குகைக்கு வெல்லவகையறியேன்
சேரும்புராசருக்கு தேன்மொழியாளென்னசொல்வேன்
இப்படியாக விளக்கொடியாள்தான்புலம்ப

 

அச்சுதானந்தரும் ஆரணங்கைத்தான்பார்த்து
என்னென்றுசொல்லி எடுத்துரைப்பார்மங்கையற்கு

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி பவளக்கொடியாளுக்கு கனவுசொல்லுதல்.

பவளக்கொடிமாது பத்தினியேயென்னாச்சி
என்னைப்பிறப்பித்த ஈஸ்வரனுமீஸ்வரியும்
அக்கினியாத்தாக் கருகாகவேவந்து
சூலமொருகையிலே கபாலமொருகையிலே
மானுமொருகையிலே மழுவுமொருகையிலே
விரித்தசடையும் வெண்புலித்தோலாசனமும்
பக்கம்கொலுவிருக்கும் பார்வதிநாயகமும்
கங்காபவானியருங் கருவுதரித்தவனார்
திருக்கண்ணுடையவருந் திருநீறுதானணிந்து
வெள்ளைரிஷபமேறி வித்தகரும்வந்தார்கள்
நான்-கண்டுபயந்து கடுகசரணமிட்டேன்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடிமாதே
சேராம்புராசாக்கள் செய்ததவத்தாலே
பவளக்கொடிமேலே பாலகியையுண்டுபண்ணேன்
பதினாறுபிராயமட்டும் பட்டம்தரிப்பித்தேன்
காலை-மத்தியானவேளையிலே மாலைதரிக்கவேணும்
மாலைதரியாமல் மணமாலைசூட்டாமல்
இருந்தீரேயாமாகில் எரித்திடுவேன்பட்டணத்தை
பட்டணத்தைநீறாக்கிப் பதியைக்கொளுத்திடுவேன்
மெய்யாகக்கண்டேன் விழித்தேன்கனவாச்சு
இப்படிக்குக்கண்டேனென்று ஏந்திழையேசொல்லுமென்றார்
அப்படிக்குச்சம்மதித்தா ளாரணங்குமப்போது
போய்வாருமென்றுசொன்னார் புண்ணியரிருவருமாய்
அப்படியேநல்லதென்றாள் ஆரணங்குபவளக்கொடி
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனுமாயவரும்
சுரங்கத்துக்குள்ளாக துரிசாய்நடந்துவந்து
சுரங்கத்தைவிட்டு வடகோடிகானகத்தில்
ஓட்டைபிள்ளையார்கோவிலண்டை வுத்தமர்கள்போயிருந்தார்
அப்படிக்குத்தானிருந்து ஆரணங்குமங்கையவள்
சப்ரகூடமஞ்சத்தில் தையலவள்நித்திரைசெய்தாள்
அந்தச்சமயத்தி லாரணங்குதாதியர்கள்
அருகேபுடைசூழ அரிவையர்கள்வந்துநின்று
தட்டியெழுப்பினார்கள் தாமக்குழலாளை
அலண்டுயெழுந்திருந்தா ளாரணங்குமங்கையவள்
காம்பழுகிநிற்பதென்ன கண்டார்கள்தாதியர்கள்
ஒருநாளுங்கருகாத மல்லிகைபுஷ்பமெல்லாம்
காம்பழுகிநிற்பதென்ன காரணமோசொல்லுமென்றார்

### பவளக்கொடியாள் கண்டகினவை தாதிகளுக்குச்சொல்லுதல்.

பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிசொல்லுகிறாள்
மஞ்சத்தின்மேலேநான் மாதர்களேநித்திரைசெய்தேன்
அந்தநல்லவேளையிலே ஆதிசிவனிங்கேவந்து
என்னை-தட்டிஎழுப்பினார் தாமக்குழலாளே
அலண்டுயெழுந்திருந்து யாரென்றுநான்கேட்டேன்
உன்னைப்பிறப்பித்த உம்பர்பிரான்வந்தேனென்றார்
எங்கேவந்தீரென்று இளங்கொடியேநான்கேட்டேன்
பதினாறுவயதளவும் பட்டமரசாண்டாய்
நீகேட்டவரம்நான்கொடுத்தேன் கிளிமொழியேஉந்தனுக்கு
நான்-மாலையிட்டுக்கொண்டதாக மங்கையரேகினவுகண்டேன்
மஞ்சத்தின்மேலாக மருவியிருக்கக்கண்டேன்
நான்-கண்டகனவாலே கருகிற்றுபுஷ்பமெல்லாம்
இவ்வளவுநானறிவேன் மற்றொன்றுநானறியேன்
என்றேயிளங்கொடியா ளெடுத்துவுரைக்கலுற்றாள்
தாய்போல்வளர்த்தெடுத்தத் தாதியர்கள்தான்கேட்டு
மணமாலைசூட்டுதற்கு மணமுண்டோமங்கையரே
அப்படியேசம்மதித்தா ளரிவையிளங்கொடியும்
இவ்வார்த்தைகேட்க எழுந்தாரேதாதியர்கள்

### பவளக்கொடியாள் கண்டகினவைக்கேட்டு தாதியர்கள்போய்ச் சேராம்புராசர்களுக்குச்சொல்லல்.

சேரும்புராசரண்டை தீவிரமாயோடிவந்து
முக்காலடிவணங்கி மூவிருகால்தெண்டனிட்டார்
தெண்டனிட்டமாதர்களே கண்டார்கள்ராசாக்கள்
என்னைப்பணிந்ததென்ன வந்திழையேசொல்லுமென்றார்
அப்போ-கைகட்டிவாய்புதைத்துக் கன்னியர்கள்சொல்லுகிறார்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிநாயகியாள்
பதினாறுவயதளவும் பட்டமரசாண்டிருந்தாள்
பட்டங்கட்டியாண்டிருந்தாள் பாருலகமத்தனையும்
இன்றையதினத்திலே இளங்கொடியாள்கோட்டையிலே
கண்டவதிசயத்தை கன்னியர்சொல்லுகிறோம்
பார்த்தவதிசயத்தைப் பாவையர்கள்சொல்லுகிறோம்
என்னவென்றுசொல்லி யெடுத்துரைப்போமன்னர்களே
மஞ்சத்தின்மேலிருந்த மலர்கள்கருகிற்று
இதுவென்னவென்றுகேட்டோம் இளங்கொடியாள்நாயகியை
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிசொன்னது
தன்னைப்பிறப்பித்த சுவாமியவர்வந்துநின்று
சொற்பனஞ்சாதித்தாராம் தோகையிளங்கொடிக்கு
பதினாறுவயதளவும் பட்டமரசாண்டாய்
கேட்டவரம்நான்கொடுத்தேன் கிளிமொழியேயுந்தனுக்கு

மணமாலைசூட்டுமென்று மகாதேவர் தானுரைத்தார்
இனி-கேட்டவரம்நான்கொடுத்தேன் கிளிமொழியேயுந்தனுக்கு
என்றுவுரைத்தாரும் ஈஸ்வரனுரைப்போது
இப்படிக்குக்கண்டேனென்று ஏந்திழையாள்தானுரைத்தாள்
மணமாலைசூட்டுதற்கு மங்கையற்குமனதாச்சு
என்றுவுரைத்தார்க ளேந்திழைமார்தாதியர்கள்
இவ்வசனங்கேட்டார்கள் இன்பமுடன்ராஜாக்கள்
வற்றிக்கிடந்த வருள்பெரியகாவேரி
முட்டப்பெருகி முழுஆறுவந்ததுபோல்
சந்தோஷப்பட்டார்கள் தரணியாளும்ராஜாக்கள்
சேரும்புராசாக்கள் துரைகளவரேதுசொல்வார்
எங்கள்-மனதிலிருந்தபடி ஆச்சுதம்மாவுந்தனுக்கு
நாங்கள்-பண்ணுந்தபசுபலன் பலித்துதம்மாபத்தினியே
மாலையிடவல்லோ வருந்துகிறோம்நாங்களெல்லாம்
எங்கள்தபசுபலன் ஈடேரிப்போச்சுதேம்மா
கன்னியழியாதார் காசினியிலாருமில்லை
அப்படியேநீயும் அழகுமணமாலையிடும்
சிந்தைகுளிர்ந்தாரே சேரும்புராசாக்கள்

### சேராம்புராசாக்கள் மந்திரியையனுப்பித் தமுக்கடிக்கும் பறையனை அழைத்துவரச்சொல்லல்.

ஆரடாமந்திரியே அறிவுள்ளவீரியனே
இன்றையபோதையிலே எந்தன்மகளார்க்கு
மணமாலைசூட்டவேணும் மங்கையிளங்கொடிக்கு
தோட்டியைத்தானழைத்து தமுக்கோசைபோடவேணும்
வெட்டியானைத்தானழைத்து வீரமுரசறையவிடும்
மண்டலத்துராசாக்கள் வரவழைக்கச்சொல்லுமென்றார்
ஆரடாதூதுவனே அழையடாசாம்புவனை
ஓடியழைத்தவனை ஒருநொடியில்வாருமென்றான்
சொன்னதைக்கேட்டுத் துரிதமாய்த்தூதுவனும்
என்னையழைத்தவகை யேதுகருமமென்றான்
அப்போ-ஐம்பதுபேர்ராசாக்கள் ஐயமாரேதுசொல்வார்
பவளக்கொடிமாது மணமாலைசூட்டுகிறாள்
பட்டத்துராசாக்கள் பலபேருந்தானறிய
முரசறையவாருமென்றார் முடிமன்னன்மந்திரியும்
அப்படியேநல்லதென்று நடந்தானேசாம்புவனும்
வெள்ளானைமேலாக விருதுகளைக்கட்டினான்
வெள்ளித்தமுக்கடித்தான் வெண்கலக்கொம்பெடுத்தான்
ஆனையேறிமாலைசூட்டி அடித்தான்பறையோசை
என்னசொல்லித்தானடித்தான் ராசாக்கள்தான்கேட்க
சேரும்புராசாக்கள் செய்ததவத்திலே

பவளக்கொடிமேலே பிறந்திருந்தபதிவிரதை
பதினாறுவருஷமாய்ப் பட்டமரசாண்டாள்
மணமாலைசூட்டுதற்கு மாதுநினைவானாள்
கொம்பனையைகேட்டவர்கள் கோடானகோடியுண்டு
மாலையிடவந்தவர்கள் வையகத்தில்கோடியுண்டு
இன்றையநாள்வரைக்கும் மணமாலைசூட்டாமல்
நித்தியகன்னியாகவே இருந்தாளிந்நாள்வரைக்கும்
இப்போ-மணமாலைசூட்டுதற்கு மாதுநினைவானாள்
ஆருக்குக்கிடைக்குமோ அன்னநடைமாது
திங்கட்கிழமையிலே திகழ்புனர்பூசத்திலே
இருபதுநாழிகையில் எழில்மங்கியஞ்சூட்டுதற்கு
மணதுள்ளராசாக்கள் மந்திரிகள்தான்கேட்டார்
அனைவோருமறியவென்று அடித்தான்பறையோசை
அடித்தான்பறையோசை அங்ககரந்தான்கேட்க
மண்டலத்துராசாக்கள் மந்திரிகள்தான்கேட்டார்
திக்கிலுள்ளராசாக்கள் அரைகளெல்லாங்கேட்டார்கள்
பிள்ளையார்கோயிலண்டை இருந்ததொருபோர்விசயன்
அடித்தபறையோசை ஆணழகன்கேட்டுவிட்டான்
சந்தோஷப்பட்டல்லவோ சரீரங்கள்பூரித்து
என்னவடிவாகப் போவோம்நாம்பந்தலுக்கு
ஆரைநினைக்கலுற்றான் அளவற்றசிந்தையிலே
மாயன்பெருமாளை மனதிலேதானினைந்து
அடியளந்தமாயவனே ஐயாசரணமையா
காற்குங்குலதெய்வமே கரியமால்மைத்துனரை
வெண்ணையுண்டசெவ்வாயா வெற்றிகொடுக்குந்தூயா
கண்ணுக்குநிமைபோலே காக்கிறேனென்றுசொன்னீர்
இதுவேளையிதுசமய மேந்திழையைக்காருமையா
பவளக்கொடியாளை மணமாலைசூட்டுதற்கு
மாலைவந்துமார்பில்விழ வரந்தாருமெந்தனுக்கு
மூக்காலேமுள்பொறுக்கி மூலைமரத்தில்கூண்டுகட்டி
காக்கையின்குஞ்சுபோல் கடிகிவளர்த்தாயே
முட்டையின்குஞ்சுகளை முகமரியாப்பாலகரை
பிட்டுவளர்த்தீரே பிரபலியமாகவென்று
உந்தன்தயவாலேயல்லோ வுயிர்கொண்டுலாவுகிறேன்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளை
மணமாலைசூட்டுதற்கு வடிவெனக்குத்தாருமென்றார்

## ஸ்ரீகிருஷ்ணதேவர் அர்ச்சுனனுக்குக் கிழப்பிராமண ரூபங்கொடுத்தல்.

அந்தச்சமயத்தில் அர்ச்சுனராசதுரை
தொண்ணூறுஞ்சென்ற துவண்டகிழவனானார்



ஸ்ரீகிருஷ்ண்தேவர் அருச்சுனராசனுக்கு கிழப்பிராமணவடிவங் கொடுத்தல்.

நாநாளும்பத்துஞ்சென்ற நரைத்தகிழவனானார்
தும்பைப்பூப்போலே துவண்டகிழவனானார்
நாணற்பூப்போலே நரைத்தகிழவனானார்
பண்ணைப்பூப்போலே பழுத்தகிழவனானார்
குஷ்டரோகிபிராமணரைப்போல் கொற்றவருரூபமானார்
வெள்ளரிப்பழம்போலே வெடித்ததுதிரேகமெல்லாம்
வெடித்தரணத்தில் புழுகுகள்நெளியுது
சீழுஞ்சிலைகண்ணீரும் சிந்துதேதிரேகமெல்லாம்
ஒருகண்ணுபொட்டை ஒருகாலுநொண்டியானார்
சொட்டைத்தலையொன்று ஒடிந்ததெண்டாயுதம்
செல்லெறித்தபுத்தகத்தைச் சேரவேணபிடித்து
பட்டயம்போலாக பரந்ததிருநாமமிட்டார்
அச்சுதானந்தரும் அறியாதபிள்ளையானார்
பிராமணரூபமது யெடுத்தானேபுண்ணியனும்
பிள்ளையார்கோவிலண்டை இருந்தாரிருவருமாய்

### சோரம்புராசாக்கள் கலியாணஞ்செய்வதற்கு பந்தலலங்கரித்தல்.

அந்தச்சமயத்திலே சோரம்புராசாக்கள்
வாசலலங்கரித்தார் மணமாலைசூட்டுதற்கு
முத்தைப்பிளந்தார்கள் மூன்றுங்கால்பந்தலிட்டார்
பவளம்பிளந்தார்கள் பந்தக்கால்நட்டார்கள்
வெள்ளியால்கால்நிறுத்தி வெத்திலையால்பந்தலிட்டார்
கரும்பாலேகால்நிறுத்தி அரும்பாலேபந்தலிட்டார்
ஈர்க்குப்பிளந்தார்கள் இருகாதம்பந்தலிட்டார்
மூங்கில்பிளந்தார்கள் முக்காதம்பந்தலிட்டார்
நாணல்பிளந்தார்கள் நாற்காதம்பந்தலிட்டார்
வன்னிமரம்பிளந்து வாசலலங்கரித்தார்
மாவிலைத்தோரணமும் மருடநல்லதோரணமும்
அரசிலைத்தோரணமும் ஆலிலைத்தோரணமும்
கண்ணாடிசல்லிகட்டி கவரிமான்சுங்குவிட்டு
பச்சைக்கிளிகளைப் பந்தலிலேதொங்கவிட்டார்
வெட்டிவேர்குரிவேரும் விதவிதமாய்த்தொங்கவிட்டார்
பட்டாலலங்கரித்து பாவாடையாலொப்பமிட்டார்
கோத்தமுத்தைதூக்கி கொலுமுகத்தில்பந்தலிட்டார்
மற்றமுத்தைப்பந்தலிலே மாணிக்கமாய்வைத்திழைத்து
வாழைமரம்கமுகுமரம் வாசலெங்குங்கட்டினார்கள்
சோலையலாமரமும் தெருவெங்குங்கட்டினார்கள்
எங்கெங்குந்தோரணமும் எங்குந்திருவிளக்கும்
சன்னல்கள்தோறுஞ் சரக்கண்பீகக்கட்டினார்

அத்தர்புனுகுகளை அள்ளித்தெளித்தார்கள்
சந்தனமுங்குங்குமமும் சவ்வாதுதான்தெளித்தார்
நிலக்கோலமிட்டார்கள் நிலத்தின்மேல்பூத்தெளித்தார்
பந்தலலங்கரித்துப் பட்டுரத்னப்பாய்போட்டார்
தங்கப்பாய்போட்டார்கள் சரிகைதலைக்காணியிட்டார்
ஆயிரமணங்குபெற்ற ஆராட்சிமணியெடுத்து
கற்பகப்பந்தலிலே கட்டியேதூக்கினார்கள்
இரும்புநல்லசங்கிலியால் இயல்பெறவேகட்டினார்கள்
ஆராட்சிமணியை அடித்தார்களோசைபெற
ஆராட்சிமணிசத்தம் அந்நகரில்கேட்டிடுமாம்

## ஐம்பத்தாறுதேசத்து ராசாக்கள் வருதல்.

அடித்தபறையோசை அல்லவருங்கேள்வியுற்று
ஐம்பத்தாறுதேசத்து ராசாக்கள்வாறார்கள்
ஓரணியாம்பச்சைவில்லு ஒன்றநூறாயிரமாம்
இரண்டணியாம்பச்சைவில்லு இரண்டாயிரஞ்சேனைகளாம்
ஆனையேறுந்துரைகளெல்லாம் ஆனையேறிவந்தார்கள்
குதிரையேறுந்துரைகள் நொற்றவரும்வாறார்கள்
கண்டயிடங்களெல்லாம் கருமலைபோல்யானைகளாம்
பார்த்தயிடங்களெல்லாம் பர்வதம்போல்தேரணிகள்
கண்கொள்ளாக்கடுஞ்சேனை மண்கொள்ளாமகாரதங்கள்
ஏகமாய்த்திரண்டு எல்லோரும்வாறார்கள்
பூமியதிருதங்கே பூலோகம்குலுங்கிடவே
வாறார்கள்ராசாக்கள் மகம்மேருகுலுங்கிடவே
பிள்ளையார்கோவில் ஓரமாய்வாறார்கள்
காளையருச்சுனனார் கண்டானேதுரைகள்தன்னை
அச்சுதானந்த ஐயரேநீர்கேளும்
இத்தண்டராசாக்கள் இச்சையுடன்வாறார்கள்
பவள்க்கொடியாளை பார்மாலைசூட்டுதற்கு
அனந்தக்கோடிராசாக்கள் ஆசையுடன்வாறார்கள்
மாயன்தயவாலே நான்மாலைசூட்டினால்
இத்தண்டராசாக்கள் இஞ்சிநின்றகுராங்காவார்
ஏக்கற்றுப்போவாரே இருந்தயிடஞ்சொல்லாதே
என்றுநகைத்தவரும் எல்லோருடன்நடந்தார்
பார்ப்பான்வருகிறதைப் பார்த்ததுரைகளெல்லாம்
ஈழக்கிழவனவனேதுக்குவாரான்காண்
தோலும்நரம்புகளுந் தொங்குதுகிழவனுக்கு
அங்கச்சதைகளெல்லாம் ஆடுதுகிழவனுக்கு
இந்தக்கிழவனவனேதுக்குவாரான்காண்
என்றுசிரித்தார்கள் இயலானராசாக்கள்

கோவிந்தாவென் று கொற்றவனும்கீழ்விழுந்தான்
தள்ளாடித்தடியூன்றி தான்வருவார்மெள்ளமெள்ள
கொக்கென் றிரும்புவார் கோழைவந்துமாரடைக்க
வப்புவாய்கொட்டிவந்த வாய்நீருசொள்ளொழுக
கண்ணிரண்டுங்கீரைவிரை காதிரண்டுங்கேளாது
தூக்கியடிவைப்பாராஞ் சுழன் றுவிழுவாராம்
எடுத்தடிவைப்பாராம் இரடிவிழுவாராம்
அறம்புகள்தட்டினல் அறுபதிடம்விழுவார்
மூங்கில்வேர்தட்டினல் மூப்பதிடம்விழுவார்
இப்படியாக யிருக்கின் றவேளையிலே
இவனைக்காணுதேயல்லோ கலங்குகிறுள்பவளகன்னி
மாலையிடத்தேடி மயங்குகிறுள்மங்கையவள்
இவனைக்-காணுதேதேடியல்லோ கலங்கிதவிக்கிறுள்
சேராம்புராசாக்கள் துரைகளிடபந்தலிலே
வாகனங்கள்விட்டிரங்கி வந்தமர்ந்தராசாக்கள்
மணக்கோலபந்தலிலே மன்னவரும்வந்தமர்ந்தார்
ஆரியகிழவனும் அர்ச்சுனனும்வந்தமர்ந்தார்

பவளக்கொடியாளை ஸ்நானஞ்செய்வித்து ஆபரணங்களை
அலங்கரித்தல்.

பங்கயஞ்சீர்கண்ணுள் பவளக்கொடியாளை
ஆயிரந்தாதிமார் ஆரணங்குமோடிவந்து
சலவைக்கல்மண்டபத்தில் தையலருமோடிவந்து
பூவிரத்னமணிமண்டபத்தில் பொற்கொடியைக்கூட்டிவந்து
தண்டையசைய சதங்கைத்திருதிகென
கொண்டையசைய குயில்வந்துகூத்தாட
வட்டமணைமேலே மாதரசையிருக்கவைத்து
நல்லெண்ணைகொண்டுவந்து நலங்கிட்டார்பந்தலுக்குள்
சந்தனயெண்ணைகொண்டு தையலர்க்குமிட்டார்கள்
குங்குமயெண்ணைகொண்டு கூந்தலுக்குமிட்டார்கள்
மூன்றுபிராமணஸ்திரீகள் மூன் றுநலங்கிட்டார்கள்
ஐந்துபிராமணஸ்திரீகள் ஐந்துநலங்கிட்டார்கள்
மங்களம்பாடியே நலங்கிட்டார்கூந்தலுக்கு
சோபனங்கள்பாடியே நலங்கிட்டார்கூந்தலுக்கு
ஆலாத்திசுற்றியே அபிஷேகமாட்டினுற்ருர்
மஞ்சனச்சாலையிலே மஞ்சள்நீராட்டிவைத்தாள்
ஒட்டிமஞ்சள்நீராட்டம் ஓரிபவளநீராட்டி
ஸ்நானங்கள்பண்ணியே தாமக்கருங்குழலாள்
நீர்காட்டிவீழ்த்தியே நெருப்பில்தலைசாய்த்து
ஈரத்துகில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைந்ததுகில்களைந்து நாகரீகப்பட்டுடுத்தி

பாவாடையுள்ளுடுத்திப் பட்டாடைமேல்சாத்தி
ஆனந்தமாரியற்கு அலங்காரம்பண்ணுற்றார்
பூவாழைகண்ணைதொட்டே போதமயிர்கோதி
சீவியேசிக்கறுத்து சிமிழ்போலகொண்டையிட்டு
வாரிமுடித்தார்கள் மாணிக்கக்கொண்டையிட்டார்
ஒவ்வொருமயிர்களுக்கு ஒவ்வொருபொன்னிதழாம்
பொன்னிதழும்பூவிதழும் போதமுடித்தகொண்டை
சுத்திமுடித்துவைத்த கொண்டைவந்துதோளசைய
கட்டிமுடித்துவைத்த கொண்டைவந்துதாமசைய
கொண்டைக்குத்தண்டையும் கொண்டைதாங்கிமாலையும்
ஆயிரம்பொன்பெற்ற அன்யானசவுரிவைத்து
கொண்டைசடையில்லை குப்பியலங்கரித்து
ஆண்மயிலும்பெண்மயிலும் அணிந்தாரழகுபெற
பல்லியுமாழ்வாரும் பக்கத்திலணிந்தார்கள்
சந்திரபிறைசூரியபிறை தையலற்குத்தானணிந்தார்
நெற்றிக்குச்சுட்டிகட்டி நேர்விழிக்குமையெழுதி
கண்ணுக்குமையெழுதி கஸ்தூரிபொட்டுமிட்டார்
முந்தாலேபொட்டுமிட்டு முன்னாலேதொங்கவிட்டார்
அன்னகொப்புவர்ணகொப்பு அருகுவாளிசொருகுவாளி
மாணிக்கவாளி மயிர்கீழேகோலியிட
கல்லிழைத்தகம்மலுங் காதில்தரித்தார்கள்
இருதலைபட்சிகளும் இசைந்ததொருகொப்பழகும்
பத்தம்புகடிகளும் பச்சைக்கல்முருகுகளும்
முத்தணிந்தமூக்குத்தி நத்துமணிந்தார்கள்
ஒற்றைச்சரடுகளாம் ஒருபுரமாம்பொற்சரிகை
முத்துச்சரப்பளியாம் மோகனமாலைகளாம்
வட்டச்சரப்பளியாம் மார்நிறைந்ததாழ்வடமாம்
கொத்துச்சரப்பளியாம் கோலமணித்தாழ்வடமாம்
சந்திரகாந்திசரப்பளியுந் தரித்தார்களப்போது
நாய்க்காரைதன்னையும் நடுக்கழுத்தில்தான்தரித்து
தோள்வாங்கிகைவாங்கி துதித்திட்டகைவளையல்
கடகஞ்சரிபவழங் கைநிறைந்தபொன்வளையல்
பத்துவிரலுக்கும் பதிந்தகணையாழி
உத்திரசஞ்சமது போட்டார்களுத்தமிக்கு
எட்டுவிரலுக்கும் இசைந்தகணையாழி
அரைக்கிசைந்தஒட்டியாண மழகுபெறசாத்தினர்
காலாழிகல்லணையாம் பீலாழிபில்லணையாம்
ஆடையாபரணமெல்லாம் அலங்கரித்தாரந்நேரம்
பட்டுபளபளென்ன பாடகக்காலசைய
முத்துமினுமினென்ன முந்தாணிபொன்னசைய

திருநீற்றுக்காப்பு திருச்சாந்துபொட்டுமிட்டார்
அஞ்சனக்கண்ணுக்கு அழகான மையுமிட்டு
மல்லிகைமாலை மாதரின்கழுத்திலிட்டார்
சந்தனமும்பன்னீருங் குழைத்துமேபூசினார்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
அப்போ-ஆரைநினைத்தா ளளவற்றசிந்தையிலே
ஆலவாய்சொக்கனை அடிபணிந்துதெண்டனிட்டாள்
மாயன்பெருமாளை மனதிலேதானினைந்து
ஸ்ரீரங்கநாயகரே துணைவாருமெந்தனுக்கு
ஆயன்பெருமாளை அவள்மனதில்தானினைத்தாள்
பரமசிவனருளால் பார்வதிகிருபையினால்
பவளக்கொடிமேலே பிறந்தபதிவிரதை
ஆதிசிவன்பூமாலை அனுப்புங்கள்எங்கனுக்கு
ஈஸ்பரியாள்பூமாலை அனுப்புங்கள்எந்தனுக்கு
கும்பிட்டுநின்றாளே கொப்பெனவேமாதுகன்னி
சொக்கர்மனமகிழ்ந்து சிந்தைமிகக்குளிர்ந்து
ஆலவாய்சொக்கரும் அம்மன்மீனாட்சியும்
திருமாலைசந்தனமும் திருநீறுந்தானெடுத்து
ஆரணங்குமாதினுக்கும் அப்போதனுப்பிவிட்டார்
வந்தபூமாலையை மாதரவர்கைபிடித்தார்
மாணிக்கத்தேர்தனிலே வந்துமெள்ளயேறினார்கள்
ஏறினபோதையிலே எடுத்தார்நெடுங்குடைகள்
சுத்திக்குடைபிடித்தார் சூரியனைக்காணாமல்
பக்கங்குடைபிடித்தார் பகவானைக்காணாமல்
கவிந்துகுடைபிடித்தார் கதிரோனைக்காணாமல்
முந்நூறுதேங்காயை முடியோடேசூரையிட்டார்
ஐந்நூறுதேங்காயை அடிதொடைத்துசூரையிட்டார்
மேளமுழங்குதுகாண் மும்மண்டலமசைய
அடிபடுதுபேரிகை அங்கர்தத்தளிக்க
பேரிகைசத்தம் பெருகியேமுழங்குதங்கே
ஐங்காதவழிதூரம் பொய்க்காளமூதிவர
நாற்காதவழிதூரம் நடுங்கியேதான்முழங்க
மூக்காதவழிதூரம் முரசுமுழங்கிவர
மச்சுரதமேறி வாராளாம்மாதுகன்னி
அங்கிருந்தராசாக்க ளனைவோரும்பார்த்துரைப்பார்
ஒருவர்க்கொருவ ருகந்துமேபேசுகிறார்
நீறுபூத்தநெருப்பை ஊதிபார்த்தவிதம்போலே
ஆயிரமின்னலிலே சோதிமின்னல்மின்னாற்போல்
தங்கத்தைகாய்ச்சியே தரையிலேவிட்டாற்போல்
ஈயத்தைக்காய்ச்சியே இலையிலேவிட்டாற்போல்

பொன்னையுருக்கி பூமியிலேவிட்டாற்போல்
சந்திரனைப்போலே தளும்புகிறாள் தையல்நல்லாள்
சூரியனைப்போலே துலங்குகிறாள் தோகையரும்
ஆருக்கிருக்குமோ அண்ணமாரேநாமறியோம்
எவருக்கிருக்குமோ இந்தநல்லபாக்கியங்கள்
தாங்களேசொல்லியே தலையெடுத்துப்பார்த்திருந்தார்
ஆனந்தவாழ்மாரி அவளுடையதேர்வருது
அரசர்சபைநடுவே ஆரணங்குதேர்வருது
அரசர்சபைநடுவே ஆரணங்குதேர்நிறுத்தி
எண்ணாதமெண்ணுகிறாள் ஏலப்பசுங்கொடியாள்
ஆணைலழகுமன்னா அர்ச்சுனராசாவே
வடிவோடுவாருமென்று மன்னவனைச்சொல்லுகிறாள்
என்னவடிவாக யிருக்கிறாயோநானறியேன்
இவளைப்போல்பெண்கள்தா னெங்குங்கிடையாதே
நாட்டிலமையாதோ நாயகியாள்தன்போலே
ஏனறுமனதில் இசைந்துவழிபோனீரோ
தருமாபுரிக்கல்லோ தானடந்துபோனாரோ
ஏன்செய்வேனீஸ்வரரே நானேதுமறியேனே
கிழக்குமுகம்நோக்கி பார்த்தாளேராசகன்னி
பக்கத்தில்தோழியவள் பாங்கியவளேதுசொல்வாள்
முத்துமுடிதரித்த முடிமன்னராசாக்கள்
என்று-தாதியவள்சொல்ல தையனல்லாள்தான்கேட்டு
தெற்குமுகமாகத் திரும்பினாள்மெல்லியவள்
பக்கமிருந்தவள் பாங்கியவளேதுசொல்வாள்
வச்சிரமுடிதரித்த மந்திரிகள்ராசரம்மா
மண்டலத்தையாளுகின்ற மகாராசராசரம்மா
மாலைசூட்டியே மன்னர்மேல்போடுமென்றாள்
மேற்குமுகமாகத் திரும்பினாள்மெல்லியவள்
பக்கத்திலிருக்கின்ற பாங்கியவளேதுசொல்வாள்
பவுந்தத்துராசாக்கள் பல்லக்குதுரைகளம்மா
திக்கரசையாளுகிற துரைகளிவர்களம்மா
மாலைகழட்டியே மன்னர்மேல்போடுமென்றாள்
வடக்குமுகமாகத் திரும்பினாள்மாதுகன்னி
பக்கத்திலிருந்தொரு பாங்கியர்களேதுசொல்வார்
திக்கரசையாண்டதொரு துரைகளிவர்களம்மா
வடதேசராசாக்கள் மன்னரிவர்களம்மா
உன்னழகுக்கேற்ற புருஷனிருப்பாண்டி
உன்-மனதுக்கிசைந்த மணவாளன்தானிருப்பான்
மாலைகழட்டுமென்றான் மாதரிளங்கொடியை

## பவளக்கொடியாள் அருச்சுனனை மாலைதரித்தல்.

பங்கயஞ்சிர்கண்ணாள் பவளக்கொடியாளும்

அப்போ-யாரைநினைத்தாளே அளவற்றசிந்தையிலே
எவரைநினைத்தாளே எண்ணமற்றசிந்தையிலே
ஆகாயவாணியம்மா அம்மன்பிடாரிகளே
மஞ்சளழகியரே மடிசேலைக்காரிகளே
பொங்கநயினரே பொற்கொடியாண்டவரே
இல்லரத்துதேவதைகள் எல்லோருந்துணையிருங்கள்
ஆலவாய்சொக்கரே அங்கயற்கண்மீனாட்சி
மதுரைமீனாட்சியம்மன் வந்துதுணையிருங்கள்
என்னைப்பிறப்பித்த ஈஸ்வரரேதுணையிருங்கள்
மாயன்பெருமாளே மங்கைநல்லலட்சுமியே
ஆயன்பெருமாளே யனைவருந்துணையிருங்கள்
முப்பத்துமுக்கோடி முனிவரெல்லாங்காத்திருங்கள்
வசிஷ்டருங்குந்தியம்மாள் மணிமாலைகாத்திருங்கள்
நான்-ஆகாயம்விட்டமாலை அருச்சுனர்தன்கழுத்தில்
நான்-சுழட்டிவிட்டமாலையது தேர்விசயன்றன்கழுத்தில்
அருச்சுனனார்தன்கழுத்தி லழகுமாலைவிழவேணும்
என்னவடிவாக யிருக்கிறாரோநானறியேன்
தேவரைத்தானினைத்து சுழட்டினாள்மாலைதன்னை
சுழட்டிவிட்டமாலையது தெய்வலோகம்போகுது
சூரியமண்டலத்தை சுற்றியுலாவுகுது
எதிர்பட்டதேவர்களை யாவரையும்பார்த்துவரும்
நாலுபக்கத்து ராசாக்களைசுற்றிவரும்
தேடியேபார்க்குதே தேர்விசயனருச்சுனரை
ஆரியனைப்போலாக இருந்ததோரருச்சுனர்மேல்
வாழ்விசயன்தோள்மேலே வந்துவிழுந்தது
பிராமணர்தன்கழுத்தில் விழுந்ததுபூமாலை
தேவதுந்துமிமுழங்க தேவர்பூமாரிபெய்ய
ஆகாயபேரிகைதா னடிபடுதுதிமிதிமென்று
புஷ்பவருஷந்தான் பொழிந்தார்கள்தேவரெல்லாம்
ஆராட்சிமணிகளு மடித்ததுஓசையுடன்
சேராம்புராசாக் ள் துரைகளவர்பார்த்துவிட்டார்
சேராம்புராசாக்க ளனேகந்துரையிருக்க
மண்டலத்துராசாக்கள் மந்திரிகள்வந்திருக்க
மற்றொருவர்தோள்மேலே விழாமலிந்தமாலை
பார்ப்பான்கழுத்திலே விழுந்ததென்னபாவமிது
ஆரியனைமாலையிட யிருந்தாளோவாரணங்கு
வேதியற்குமாலையிட விதித்ததோபெண்மகளே
செல்வமாய்ப்பெண்பிறந்து சோழியநாளாச்சோ
அருமையாய்ப்பெண்பிறந்து அம்பலமானீரே
பிச்சையிரந்துண்ணும் பிராமணர்க்குப்பெண்ணுமி

கல்லெடுப்பரிசக்கு காத்திருக்கநாளாச்சே
பாத்தாளியரிசிக்கு பார்த்திருக்கநாளாச்சோ
இந்தக்கிழவனுக்கு இதுக்காநான்பெண்வளர்த்தேன்
குருட்டுக்கிழவனுக்கோ கோடிநாள் தபசுபண்ணேன்
மொட்டிக்கிழவனுக்கோ வேணநாள் தபசுபண்ணேன்
சண்டிக்கிழவனுக்கே தனிமாலைசூட்டிவிட்டாள்
இந்தக்கிழவனுச்கு எவர்தான் வழிவிட்டார்கள்
பாவிக்கிழவனவன் பந்தலுக்குள்ளேன்வந்தான்
ஆர்காண்பிராமணரே அழகுமாலைதாருமென்றார்
பெண்ணரசிபோட்ட பூமாலைதாருமென்றார்
அப்போதவாள்விசய னரியனுமேதுசொல்வான்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாட்கு
மாலைதரிக்கிறார் மன்னவர்களென்றுசொல்லி
பிச்சைகருவந்திடத்தித் பூமாலைபோட்டுவிட்டாள்
வேணுமென்றுவந்தேனே மெல்லியரைமாலையிட
இவனைநான்பெண்டுவைத்து என்னசெய்யப்போறேனப்பா
தள்ளாதகிழவனுக்குத் தையருமேன்காணும்
எனக்கிட்டமாலைதன்னை எடுத்துத்தரித்துக்கொள்ளும்
மாலைதரித்துக்கொள்ளும் மங்கிலியஞ்சூட்டுகிறோம்
உங்களுக்குப்பெண்டிருக்க வுலகத்திலுள்ளபடி
வளர்த்துயெடுத்தீர்கள் மாலைதரித்திடுங்கள்
இந்தாறுமாலையென்று ஈய்ந்தார்பிராமணரும்
அந்தச்சமயத்தி லாரணங்குதான்கேட்டு
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிபோடிவந்து
என்னையும்பெற்றெடுத்த இயலானவண்ணாவே
மாளாக்கிழவனுடன் வார்த்தைகளேனுங்களுக்கு
என்தலைவிதிப்பயனை எவருமறியார்கள்
ஆதிசிவன்றன்னெழுத்தை ஆருமறியார்கள்
எல்லாத்தலையிலும் ஒரெழுத்துஈரெழுத்து
பாவித்தலையிலிந்த பிராமணரையெழுதிவைத்தார்
கதியைத்துலைக்கவல்லேன் காவேரிநீந்தவல்லேன்
என்விதியைத்துலைக்குகைக்கு வெல்லவகையறியேன்
அன்றெழுதுமாதிசிவன் அழித்தெழுதப்போறதில்லை
தலையிலெழுதினதைத் தள்ளிவைக்கப்போறதில்லை
எட்டிலெழுதினதை எடுத்துரைக்கப்போறதில்லை
தலையிலெழுதினது தவருதொருக்காலும்
ஒருவனுக்குமாலையிட்டா ருலகத்தாருள்ளபடி
இருவருக்குப்பெண்டாக யிருப்பேனோஎன்தகப்பா
வாரும்பிராமணாவென்று வலதுகையைத்தான்பிடித்து
மாணிக்கவாசலிலே மறையவனைக்கொண்டுசென்றார்

அந்தச்சமயத்தி லாயன்பெருமாளும்
செந்தும்பிபோல ஸ்ரீராமர்வடிவெடுத்தார்
சிவ்வென்றுதான்பறந்து தேன்மொழியாள் தன்செவியில்
வந்துரைத்தார் மயிலனையாள் தன்செவியில்
அஞ்சாதேயஞ்சாதே வருந்தங்கையஞ்சாதே
ஆணழகுமன்னன் அர்ச்சுனராசன் காண்
என்றுவுரைத்தா ரிளங்கொடியாள் தன்செவியில்
அருஞ்செவியில்தானுரைத்து ஆயனும்போய்விட்டார்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
வேடத்தைமாற்றி விசையர்வடிவெடென்றாள்

## அருச்சுனன் கிழப்பிராமணவடிவைவிட்டுத்
## தன்சுயரூபமெடுத்தல்.

சோராம்புராசாக்கள் சிந்தைகுளிர்ந்துவிட
கண்டபேர்பயந்துவிட கால்கைதடுமாற
சிந்தைகுளிர்ந்துவிட தேர்விசயன்வடிவெடுத்தார்
அங்கங்குளிர்ந்துவிட அருச்சுனன்வடிவெடுத்தார்
முன்னழகும்பின்னழகும் முதுகில்மச்சரேகைகளும்
பல்லிலேபாசவீணை நாவிலேநட்சத்திரம்
நாவிலேநட்சத்திரம் நயனவிழிபார்வைகளும்
மாயன்தயவாலே வாள்விசயன்ரூபமானார்
ஆயன்தயவாலே அருச்சுனன்ரூபமானார்
கண்டவர்தான்மயங்க காண்டீபன்வடிவெடுத்தார்
பார்த்தவர்கள்தான்மயங்க பார்த்தீபன்வடிவெடுத்தார்
ஐந்துபிராய மறியாப்பிராயமென்று
அச்சுதானந்த ரையரும்வந்துவிட்டார்
பவளக்கொடிமாது பார்த்துமகிழ்ந்துவிட்டாள்
சோராம்புராசாக்கள் தேர்விசயன்றன்னைக்கண்டு
கண்டுமகிழ்ந்தார்கள் காண்டீபனர்ச்சுனரை
பார்த்துமகிழ்ந்தார்கள் பார்த்திபனருச்சுனரை
விசயனழகுகண்டு மெத்தமகிழ்ந்தார்கள்
எங்கள்-மகளார்க்குயேத்த மணவாளன்வந்தீரோ
அருச்சுனரைப்போலாக வாருமலாணழகா
பிரமணவடிவாக ஏனெடுத்தீர்புண்ணியரே
வந்தென்னைப்பெண்கேட்டால் கொடுக்கேனென்றுசொல்லுவமோ
ஈனைக்கிழவனைப்போல் யேன்காண்வடிவெடுத்தீர்
என்றுமனமகிழ்ந்தா ரியலாணராசாக்கள்
அந்தச்சமயத்தி லனந்தமானதுரைகளெல்லாம்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
ஆரியனைமாலையிட அழைத்துபோகக்கண்டவர்கள்
இஞ்சிநின்றருகாந்துபோ வேக்கரித்தருசாக்கள்

விருத்தக்கிழவனுக்கு வேதியர்க்குவாய்த்ததென்று
அங்கிருந்தென்னபல னென்றெண்ணிராசாக்கள்
அவரவர்மாளிகைக்கு அனைவரும்போகலுற்றார்
சேரும்புராசாக்கள் துரைகளவரேதுசொல்வார்
வில்விசயனருச்சுனனை வேந்தர்வரவழைத்து
நல்லவேளைதப்பாமல் ராகுகாலம்வாராமல்
வாச்சியங்கள்தியாச்சியங்கள் வாராதவேளைகண்டு
சேஷைமணைபோட்டு சிறானபந்தலிட்டு
சென்னலரிசிகொண்டு செங்கதிரோன்பொங்கலிட்டு
மாப்பிள்ளையும்பெண்ணையும் மணைமேலேகுந்தவைத்து
மூன்றாறுபிராமணஸ்திரீகள் மூகந்துமூளைதெளிக்க
சாலுங்கரகமும் சந்திரர்க்குமுன்பாக
அம்மிவலமாக அரசாணிமுன்பாக
வேதப்பிராமணர்கள் வேதங்களோதிவர
ஓமப்புகையெறிய வுடனேகவேதஞ்சொல்ல
காப்பரிசிதான்வழங்கி கங்கணமுங்கட்டினார்கள்
சேரும்புராசாக்கள் துரைகளெழுந்திருந்து
மாவுங்கமூறாலும் மஞ்சளுடநெல்விதையும்
தாலியுங்கூறையுந் தான்கொண்டுவந்தார்கள்
குருகுலத்துராசாவே குந்திமகனாரே
மந்தாரக்குந்தியரும் பெற்றமகனாரே
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளை
தந்தேனுனக்கிந்தேன் தாரைநீர்பிடியுமென்றார்
காலுக்குமிஞ்சியிட்டார் கைக்குகணையாழியிட்டார்
தையலரைத்தான்கொடுத்து தாரைநீர்வார்த்தார்கள்
ஏந்திழையைத்தான்கொடுத்து இஷ்டநீர்வார்த்தவரும்
மாலைதரித்து மணமாலைசூட்டுமென்றார்
அப்போதருச்சுனனு மாயனைத்தானினைந்து
தாலியைக்கட்டினான் தேர்விசயனருச்சுனனும்
பிர்மமுடிமூன் றுமுடி போட்டானே வாள்விசயன்
காப்பரிசிதான்வழங்கி கங்கணமுந்தானவிழ்த்தார்
அம்மிமிதித்து அரசாணிசுற்றிவந்து
பெரியோர்களெல்லோரும் பெருக்கமனமகிழ்ந்து
மன்னவனுந்தேவியுமாய் மாளிகையினுட்புகுந்தார்
தங்கத்தின்மேடையின்மேல் தனஞ்சயனும்வீற்றிருந்தார்
ஐம்பதுபேரு மவர்களுடதேவிமாரும்
பொங்கிமனங்குளிர்ந்து பொற்கொடிமாதரெல்லாம்
தனஞ்செயற்கும்வேதியற்கும் சமமாகசேஷையிட்டு
பாலும்பழமும் பரிவுடனேதான்கொடுத்தார்

பாலமிர்தமுண்டு பசியாறித்தானிருந்தார்
அப்பால்வந்தமனிதருக்கும் மகாபெரியசேனைகட்கும்
அத்தரும்பன்னீரும் அழகாகத்தான்தெளித்து
சந்தனமுங்கெந்தபொடி தாம்பூலந்தான்வழங்கி
பாரிசாதபுட்பம் பரிமளங்கள்தன்னுடனே
பூரிவெகுதானங் கொடுத்தார்பெரியோர்க்கு
தட்சணைத்தாம்பூலம் தார்வேந்தர்தான்கொடுத்தார்
வந்தமனிதர் மகாசேனையெல்லவர்க்கும்
கைக்குச்சலங்கொடுத்தார் கட்டமுகரெல்லவர்க்கும்
பந்தியமர்த்தி பரிமாறிபோசனங்கள்
பொரித்தபொரிக்கறியும் பொன்போல்பருப்புகளும்
பத்துவகைபச்சடியும் பசியாறியாவர்களும்
புத்துருக்குநெய்யுமாய்ப் போதமிகப்படைத்து
முப்பழஞ்சர்க்கரையும் அப்பளமுந்தான்படைத்து
ஆபாசந்தீரசிவ பாயாசந்தான்கொடுத்து
போசனங்களுண்டு புகழ்வேந்தர்யாவருந்தான்
கைகாலலம்பி கனமிகுந்தமன்னரெல்லாம்
வேடிக்கையாக வீற்றிருந்தார்பந்தலிலே
அப்போ-வெட்டியபாக்கும் மிகுமணக்குவெற்றிலையும்
சொர்னபுஷ்பமாலைகளும சோடுசகலாத்துகளும்
வைத்துக்கொடுத்தார்கள் வரிசைவெகுமானம
ஒட்டைகுதிரைகள் உத்தமர்கள்மொய்யெழுதி
உத்தமரெல்லோரும் உள்ளங்களிகூர்ந்து
காண்டீபனருச்சுனனும் கன்னியவள்பைங்கிளியும்
ஊர்கோலமானபின்பு வுத்தமனுக்தேவியும்
பள்ளியறைமண்டபத்தில் பாங்குடனேபோகலுற்றார்
வந்திருந்தராசாக்கள் மன்னவர்களெல்லோரும்
அவரவர்கள்ராச்சியத்தை ஆளுகைக்குப்போனார்கள்
வாள்விசையன்கோமானும் மருவுண்டுதானிருந்தான்
பதினாறுநாளாச்சு பார்த்தன்வந்துமாலையிட்டு
இப்படியாக யிருக்கின்றவேளையிலே
அல்லிப்பெருமாளும் ஆரணங்கேதுசெய்தாள்
மகுடத்துரைச்சியரும் வாழ்வரசியல்லியரும்
கொச்சித்துரைச்சி கொடிமதுரையல்லியரும்
மச்சிதுரைச்சி வடமதுரையல்லியரும்
காலையில்தானெழுந்து கனிவீரயைச்சுத்திபண்ணி
பாளைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழித்து
பொய்கையில்போயிறங்கி பொற்கிளியுமப்போது
ஈரத்துகில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
கணைந்ததுகில்களைந்து நாகரீகப்பட்டுடுத்தி

சொக்கருளென்று திருநீற்றுக்காப்புமிட்டு
மதுரைமீனாட்சியரை மாதாவைத்தானினைந்து
அரன்பூசையரிபூசை அநுஷ்டானம்பண்ணியவள்
இங்கிதமானதொரு அலங்காரம்பண்ணலுற்றாள்
சல்லடந்தான்தொடுத்து தட்டிபிருவெடுத்து
தட்டியின்மேலொட்டியாணம் சாதாவரிந்துகட்டி
சல்லடத்தின்மேலேயவள் தாமரைப்பூச்சுங்குவிட்டாள்
சங்குவைத்தாள்வெள்ளைவைத்தாள் சாதிலிங்கபொட்டுமிட்டாள்
வலதுபுறத்துசுங்கிலே மாகாளியட்சரமும்
தென்புறத்துசுங்கிலே தெய்வகன்னியட்சரமும்
முத்துகபாயணிந்து முதுகெல்லாமங்கிபோட்டாள்
வச்சிரகபாயணிந்தாள் மார்நிறையஅங்கிபோட்டாள்
கிரீடபுஜகீர்த்தி கீர்த்தியுடன்தானணிந்தாள்
அங்கிகபாயணிந்தாள் அல்லிமலர்நாயகமும்
கேடயவல்லயமும் கிளிமொழியாள்தான்தரித்தாள்
மந்திரவாளெடுத்து வலதுகையில்தாள்பிடித்தாள்
பதினெட்டுஆயுதமும் பத்தினியாள்தான்தரித்தாள்
முத்துமிதியடியை தொட்டுநடந்துவந்து
வசந்தமணிமண்டபத்தில் மாதவளும்வந்தமர்ந்தாள்
கொலுக்கூடமண்டபத்தில் கொம்பனையும்வந்தர்ந்தாள்
மந்திரிபவளசேனை மயிலனையும்வந்தமர்ந்தாள்
தாதிகளுந்தோழிகளுந் தையலரைச்சூழ்ந்தார்கள்
செங்கமலத்தாதி சேனாபதிபவளசேனை
வெண்சாமரைக்கவரி வீசியவள்பக்கம்நின்றாள்
ஆலவட்டஞ்சாமரை அருங்கிளிமார்வீசிவர
மல்லிகைவிசிறிகளும் மயில்விசிறிதான்வீச
செண்டாடிபந்தாடி தேன்மொழிமார்சூழ்ந்துவர
கேளிக்கைபார்த்து இருக்கிறாள்கொம்பனையாள்
சங்கீதம்பார்த்து இருக்கிறாள்தையனல்லாள்
முத்துவிற்றவர்த்தகரும் வேணகணக்கர்களும்
கணக்குகட்டுதானெடுத்து கடுகவேவாரார்கள்
கொம்பனையாள்முன்னேவந்து கும்பிட்டுதெண்டனிட்டார்
கைகட்டிநின்றார்கள் கட்டழகரெல்லவரும்
மகுடத்துரைச்சியவள் வாழ்வரசியேதுசொல்வாள்
முத்துகொடுத்ததும் விற்றகணக்குகளும்
அண்ணுடைக்கணக்குகளென் அம்பலத்தேவாராமல்
எட்டுநாள்கணக்குகளும் எழுதிமுடியுமென்றாள்
எட்டுநாள்வாராமல் இருக்கவயணமென்ன
ஒருமுத்துகுறைந்தாலே உயிர்க்கழுவில்போட்டிடுவேன்
இருமுத்துகுறைந்தாலே சரல்பிளந்திடுவேன்

வாயாற்பொறிபறக்க வலதுகண்ணலனல்வீச
செந்தலைநாகம்போல் சீறியெறிபாய்ந்தாள்
கண்ணால்பொறிபறக்க காதங்கனல்வீச
வாயாற்பொறிபறக்க வலதுகண்ணலனல்வீச
ஈச்சம்பழம்போ லிருகண்ணுந்தான்சிவக்க
கோவைப்பழம்போலே கொள்ளிகொண்டுவீசுதுபார்
கண்டச்சதைகளைக் கடித்துமிழ்ந்தாளல்லியரும்
கணக்குக்கதிகாரி கைகால்நடுங்கிவிட்டார்
எட்டுநாள்கணக்குகளும் எழுதிமுடிக்கலுற்றார்
கணக்குமேல்கண்ணா யிருக்கிறாள்கன்னியரும்
ஆராலுங்கூடியே ஆற்றவொண்ணாக்கோபமப்பா
அந்தச்சமயத்தில் அங்குவாராணபுலந்திரனும்
வீதிவிலாசமது விளையாடிவேல்வேந்தன்
தங்கத்தேரோட்டியே தனஞ்செயன்புத்திரனும்
செம்பொன்தேரோட்டியே சித்திரவீதியெல்லாம்
முத்தின்தேரோட்டியே மூடிமன்னர்வீதியெல்லாம்
மாணிக்கத்தேரோட்டி மதுரைத்தெருவீதியெல்லாம்
தண்டையசையவே சதங்கைத்தகதகென்ன
அரைவடமுங்கிண்கிணியும் அசைந்துநிழல்காட்ட
கணையாழிசோதியிட கண்டசரங்கள்மின்ன
வட்டமிட்டநெற்றியிலே வயிரகட்டிநின்றிலங்க
சருவாபரணங்களும் தாழ்வடமுந்தானசைய
சிங்காரமிதியடியும் சிங்காணிவில்லுகளும்
பக்கமிருபுறமும் பட்டாசுமுட்டிவர
கத்திகட்டுமன்னரெல்லாங் கைகட்டியேந்திவர
ஈட்டிபிடிமன்னரெல்லாம் இருபுறமுஞ்சூழ்ந்துவர
பொற்பரிசுமேலாகப் பிள்ளைவருகுதுபார்
வெகுசனங்கள்கூடி நெருக்கிடங்கொள்ளாமல்
அங்கேநெருங்கிவந்த அருமகனைக்கண்டுவிட்டாள்
அப்பாவருக ஆணழகாபுத்திரனே
வருகவருகவென் வாழ்வேவருகவென்றாள்
திருவரும்பூவே தேனேவருகவென்றாள்
கண்ணின்மணியே கருவிளமேநீவருக
கண்மூன்றுடைய கைலாசநாதரே
சொக்கர்திருவாசலுக்குத் தூண்டாமணிவிளக்கே
வைகைக்கரைதனக்கு மண்சுமந்தசொக்கரே
கப்பலுஞ்சோங்கும் கறைதுறையுமுள்ளவனே
அப்பாவருகவென்று ஆவலுடன்முத்தமிட்டாள்
வாரியெடுத்தாளே மதிமுகத்தில்முத்தமிட்டாள்
மைந்தனையேந்தி மடியிலேவைத்திருந்தாள்

போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறுவான்
போதும்போதுமென்னாச்சி பிள்ளையைக்கொஞ்சினது
மைந்தரைக்கொஞ்சினது போதுமம்மாமாதாவே
தங்கத்தேர்தந்தாரே தனஞ்செயனாரென்பாட்டன்
செம்பொன்தேர்தந்தாரே திகழ்வேந்தரென்மாமன்
மாணிக்கத்தேர்தந்தார் வளநாட்டுராசாக்கள்
முத்துத்தேர்தந்தார்கள் முடிபுனைந்தராசாக்கள்
சித்திரவீதி தெருக்கள்பதினாயிரமும்
மதுரைப்பெருந்தெருவும் மட்டில்லாவீதிகளும்
பவளத்தேரோட்டவென்று பத்தினியேநான்கேட்டேன்
அவ்வார்த்தைகேட்டாளே அல்லிப்பெருமாளும்
அருச்சுனன்போனதொரு சேதியைப்பார்க்கலுற்றாள்
பதினாறுநாளாச்சு பார்த்திபன்போனதுவாம்
மூன்றுநாளாறு பொழுதிலேவாருமென்று
மைந்தன்மேலாணையிட்டு மாபாவிபோனானே
ஆணைமறந்தவனும் ஆர்மேலேஆசைகொண்டான்
எங்கேஉல்லாசமாக யிருக்கிறாரோவாள்விசையன்
அவன்-எமலோகம்போனாலும் இட்டுவந்துசங்கரிப்பேன்
பாதாளம்போனாலும் பார்த்திபனைக்கொன்றிடுவேன்
ஆகாயம்போனாலும் அதம்பண்ணிப்போட்டிடுவேன்
என்று-சீறியேகண்சிவந்து சிங்கத்தின்குட்டியைப்போல்
கையைக்கடித்து கன்னியருந்தானுமிழ்ந்தாள்
உதிரமுஞ்சளையுமாய் உமிழ்ந்தாளேபூமியிலே
காட்டானைபோலாகத் தேன்மொழியாளல்லியரும்
சிங்கத்தைப்போலாக தேன்மொழியாளல்லியரும்
உருட்டினாளிருகண்ணை ஒதுங்குகிறார்ராசாக்கள்
ஆக்கரித்துபற்கடித்து அதட்டியெழுந்தாளே
ஆறுலுங்கூடியே ஆற்றவொண்ணாக்கோபமுடன்
பாண்டிவளநாடாளும் பஸ்பமாய்ப்பறக்குது
பகல்வத்திபோலாக எறியுதேயிருகணனும்
மைந்தனையிடுக்கி வளநாட்டாள்வாறாளே
அறுபதுபேரொழுந்து அந்நேரமோடிவந்து
அம்மா-எந்தநாடென்று அறிவாயிளங்கொடியும்
எங்கேயிருந்தாலு மிட்டுவாரோமர்ச்சுனரை
இங்கேயிருமம்மா இராசகுலநாயகமே
என்றதுகேட்டுமவளேதுசொல்வாளல்லியரும்
எனக்கெதிர்சொல்லாதே யென்னாணைஐயாவே
அரண்மனைதிறவுகோல் அண்ணரிடகைகொடுத்தாள்

அல்லியரசாணி அருச்சுனன்மேல் படையெடுத்தது.

ஆரடாமந்திரியே அறிவுள்ளகாருபாரி
ஆனைசேனைபரிவாரம் அடங்கலும்பயணமென்றாள்

காலாளுஞ்சேனைகளுங் கடுகவேபயணமென்றாள்
தேர்கொண்டுவாருமென்றாள் துரிதமாய்ப்போகவென்று.
சொன்னபொழுதிலே துரிதமாய்வந்தார்கள்
சித்திரத்தேர் தன்னைச் சோடித்தாரழகுபெற
ஆறுவண்டிநாறுசட்ட மழநானகுத்துக்கால்
குத்துக்கால்சொப்பனிட்டு கொடுங்கைதிரைவளைத்து
கும்பக்கலசமுங் குடைகளலங்கரித்து
அம்புறாச்சிலையது அலங்காரம்பண்ணினார்கள்
பாறுசாரிபுரவியொன்று பஞ்சகலியாணிபொன்று
தேசியெனும்புரவியொன்று சிவரத்தினகுதிரையொன்று
நாலுபுரவிகளை கலமாயலங்கரித்து
குதிரைகளைகொண்டுவந்து கொப்பெனவேகட்டினார்கள்
அலங்கரித்தோம்தேரையென்று அடிபணிந்துநின்றார்கள்
பயணம்பயணமென்று பயிணபேரிதானடித்தார்
இப்போதுபயணமென்று யியல்பாகதானடித்தார்
கானலுக்குத்தானெடுத்தார் கறுப்புநல்லகூடாரம்
வெய்யலுக்குத்தானெடுத்தார் வெள்ளைநல்லகூடாரம்
பனிகளுக்குத்தானெடுத்தார் பச்சைநல்லகூடாரம்
யானையின்மேல்டோராவுங் குதிரையின்மேல்சண்டாவும்
கறுப்புநிசான்செகப்புநிஜான் கலந்துபிடித்தார்கள்
யானைகளாறுகோடி அசுவங்களேழுகோடி
தேர்களொருகோடி தோணிகள்முக்கோடி
அமரதருஞ்சமாதரும் ஆஸ்தானமகாதரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியமராட்டியரும்
ஈழத்துவங்கணரு மிளநாட்டுச்சோனகரும்
ஒளிவானபாருகரும் ஒட்டியருஞ்சோனகரும்
சட்டைகழட்டாத சாமார்த்தியராணவரும்
குப்பாயம்வாங்காத குலமன்னராணவரும்
மட்டில்லாசேனைகளும் மன்னர்பயணமானார்
பட்டயமுஞ்சூரிகளும் பாங்கானகவுரிகளும்
நிமிசாபெரியலகு நேரிசமாம்பெரியகத்தி
கூலிசமுஞ்சூலிசமுங் குண்டுதுப்பாக்கிகளும்
சக்காரமும்வேலுந் தடியும்பெருவுலக்கை
உண்டைவில்லுஞ்சுண்டைவில்லுஞ் சிங்காணிபூச்சிவில்லும்
எண்ணான்குஆயுதமு மெடுத்தரையிற்கட்டினார்கள்
பாளயங்களுள்ளதெல்லாம் பயணங்களாச்சுதம்மா
ஆனையின்மேல்பேரிகை அடிபடுதகுமுகுமென்று
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைகிளம்புது
அண்டங்கிடுகிடென்ன ஆகாசம்தெக்குவிட
பூமிகிடுகிடென்ன பூலோகம்தெக்குவிட

அடங்காதகோபமுட னல்லிமலர்நாயகியாள்
அலங்கரித்ததேர்மேலே ஆரணங்கேறினாள்
இடுக்கியபிள்ளையுட னேறினாள்தேர்மேலே
மந்திரிபவளசேனை மங்கையவள்தானேறி
தேரைதிருப்பினாள் துரிதமாயட்சணமே
சுற்றிக்குடைபிடித்தார் சூரியனைத்தான்மறைக்க
பக்கங்குடைபிடித்தார் பகவானைத்தான்மறைக்க
கவிந்துகுடைபிடித்தார் கதிரோனைத்தான்மறைக்க
அடிபடுதுபேரிகை அங்ககரக்தானதிர
எட்டுதிசைநடுங்க இளங்கொடியாள்தான்வாறாள்
இரதகசதுரகமுடன் நாலுவகைசேனைகளும்
மவனியும்மரவணியும் மற்றுமுள்ளராசபலன்
வருகுதுவெகுசனங்கள் மண்ணுவிண்ணுங்கொள்ளாமல்
செந்தூளெழும்புகுது சூரியனைக்கப்புதங்கே
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புதங்கே
அண்டரண்டந்தானதிர அடித்தார்கள்பேரிகையை
பூமிகிடுகிடென்ன பேரிகைதானடிக்க
கடல்நீர்சுவரிடவே காளசின்னந்தானடிக்க
அஷ்டதிக்கெங்கும் அதிரசின்னந்தான்முழங்க
அண்டங்கிடுகிடென்ன அடித்தான்பறையோசை
ஆனையணிநடக்க அரசுமன்னர்தானடக்க
குதிரையணிநடக்க குலசேகர்பின்னடக்க
தெத்துக்கடந்து தெருவீதிதான்கடந்து
அங்காடிவீதியது ஆயிரந்தெருகடந்து
குச்சிலியர்வீதி குலமன்னர்தான்கடந்து
பீங்கான்கடைத்தெருவும் பின்விட்டுமுன்னடந்தார்
வைகைக்கரைகடந்து மதுராபுரிகடந்து
பட்டணத்தைவிட்டு பரிவாய்கடந்தார்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அரியவனங்கடந்து
சில்லன்றுபூத்த செடிகள்வனங்கடந்து
புல்லென்றுபூத்த புலியின்வனங்கடந்து
வேங்கையிருக்கும்வனம் வெண்களாப்பூத்தவனம்
எட்டடிவேங்கை யிருக்கும்வனங்கடந்து
பத்தடிவேங்கை பருத்தவனங்கடந்து
அறுபதடிவேங்கை படர்ந்தவனங்கடந்து
சிங்கமுலாவுவனம் சிறுபுலிதூங்குவனம்
ஆளியுலாவுவனம் அன்னபட்சிதூங்குவனம்
கெண்டபேரண்டங்கள் இருக்கும்வனங்கடந்தார்
பாதிரிமுல்லை பருத்தவனங்கடந்தார்

ஒருகாரைக்கிருகாரை உயர்ந்தகொம்பில்தானிருக்க
கருகாரைக்கிரைதேடும் கதலிவனங்கடந்தார்
மயிலோசைகேட்கும் மாந்தோப்புதானடந்தார்
ஈக்கள்நுழையாத இருண்டவனங்கடந்தார்
அண்டரறியாத காண்டாவனங்கடந்தார்
வேந்தரறியாத வெளிக்காடுதானடந்தார்
சந்திரர்கள்சூரியர்கள் காணுவனங்கடந்தார்
வெகுதூரம்வருகையிலே வேல்பொருதுங்கண்ணாளும்
பவளம்விளைகின்ற பாங்கானகாடுகண்டாள்
தூரத்தில்கண்டவுடன் செல்வனவனேதுசொல்வான்
எங்களையர்போனது இக்காடோ ஆச்சியென்றான்
ஐயாவென்றுசொல்லவே அடித்தாள்தவடையிலே
அடித்தபொழுதிலே யலறிப்புலம்பிவிட்டான்
பாவியைநினைக்கவல்லோ பாலகனையானடித்தேன்
என்று-மைந்தனைக்கொஞ்சியல்லோ மடிமேலேவைத்தாளாம்
அப்போ-மதுரைப்பரிசனங்கள் மகாசேனைதான்கடந்தார்
மதுரைபடைத்தலைவர் மந்திரிகள்காரியக்காரர்
சேனைபரியமுதல் சமர்த்தர்கள்சூழ்ந்துவர
ஐந்துலட்சங்குதிரைகளு மெல்லியரைசசூழ்ந்துவர
ஆனைபவுந்துகளு மாரணங்கைச்சூழ்ந்துவர
சேனைப்பரிசனங்கள் சொல்லமுடியாது
இப்படியாக எச்சரித்துதானடக்க
அப்போது-நாடுயெறிகிறதும் கல்லுப்பிரட்டுரதும்
ஆனைமேல்பாரி அசைகிறதும்குலுங்குவதும்
குதிரையின்மேல்கூடாரம் கூடஅசைகிறதும்
குதிரைபிரியாமல் கூடநடக்கலுற்றாள்
அப்போது அல்லியரும் ஆரணங்குமேதுரைப்பாள்
ஆனைகளாறுகோடி குதிரைகளேழுகோடி
மதுரைபடைகளெல்லாம் மன்னுவருகுதடா
மதுரைவளநாட்டில் மகாராசர்கேட்கலுற்றார்
அப்போ-அம்மாவருகிறது ஆனைப்படைகளெல்லாம்
பாண்டிவளநாட்டாளும் பவளக்காடுபோய்புகுந்தாள்
வெய்யல்விடாய்த்துவந்து விழுந்ததேசேனைகளும்
காதையடைக்கிறதும் களையாய்வருகிறது
நாக்கைவரட்டுகிறதும் டூராக்கிழுக்கிறதும்
வாடிமயங்கினர் மயிலனையாள்சேனையெல்லாம்
அந்தச்சமயத்தி லாரணங்குதான்கேட்டு
பாளையமிறங்குமென்றான் பத்தினியாளல்லியரும்
கூடாரம்போடுமென்று கொப்பெனவேயிறங்குமென்றாள்
பஞ்சவர்னகூடாரம் பலதிசையும்போட்டார்கள்

வீதிவீதியாகவே யமர்ந்ததுபாளையங்கள்
ஆனைக்குடேறாவும் குதிரைக்குகொட்டாவும்
மாட்டுக்குத்தும்புகளும் மனிதருக்குகூடாரம்
பாளையங்கள்தோறும் படிகொடுத்தாளல்லியரும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
கானகத்திலுள்ளிருக்கும் கனவேடர்வந்தார்கள்
பாளையமிறங்கினதைப் பார்த்தார்கள்வேடுவர்கள்
இத்தனைகாலமாய் இதுநெடுநாள்கண்டதில்லை
இப்படிக்குப்பாளையங்கள் இவ்வுலகிற்கண்டதில்லை
இப்பெரியகானகத்தில் இருக்கிறோம்வெகுநாளாய்
இவ்வனத்தில்நாமும் பார்த்ததில்லைவெகுகாலம்
இதுவென்னகாலமோ என்றுமனதிலெண்ணி
என்றல்லோவேடுவர்கள் யெச்சரித்துவந்தார்கள்
அப்போதுமந்திரிகள் கண்டார்கள்வேடுவர்கள்
ஆரப்பாநீங்களென்று கேட்டார்களப்போது
இந்தநல்லகானகத்தில் இருக்கின்றவேடுவர்கள்
என்றுமவர்சொல்ல யெச்சரித்துமந்திரிகள்
பிடித்துவந்துவிட்டார்கள் பெண்பெருமாளண்டையிலே
அவர்கள்-கும்பிட்டுநின்றார்கள் கொம்பனையாள்முன்பாக
மகுடத்துரைச்சிவவள் வாழ்வரசிகண்டுவிட்டாள்
எந்தவூர்வேடுவரோ எனக்கரியச்சொல்லுமென்றாள்
இந்தவனத்திலே ஏனம்மாயிங்குவந்தாய்
கதண்டுகொளவிகொட்டி காவலர்கள்தான்மடிந்தார்
முகமறியாப்பேரை மொய்க்கும்கதண்டுகள்தான்
இந்த-கானகத்திலம்மா கதண்டுகுளவிகள்தான்
பவளம்வெட்டவந்தவர்கள் பாருலகில்மெத்தவுண்டு
கதண்டுகொட்டிமடிந்தவர்கள் கணக்குமிதமில்லை
எங்கள்-ஆச்சியெழுப்பிடுவாள் அனந்தங்கோடிசேனைகளை
என்றுசொல்லவேடுவரும் யேந்திழையாளேதுசெய்வாள்
இதுயாருடையராச்சியம் என்றாளே அல்லியரும்
ஆனால்கேளென்னாச்சி அடைவாகச்சொல்லுகிறோம்
சேராம்புராசாக்கள் துரைகளவரைம்பதுபேர்
பிள்ளையில்லையென்று பெருந்தபசுண்ணினார்கள்
மைந்தனில்லையெறு வருந்தித்தவசுபண்ணார்
குமாரனில்லையென்று கோடிதபசுபண்ணார்
ஆருக்கும்பிள்ளையிலலை யென்றாளேயீஸ்பரியாள்
அப்போ-பரமசிவன்மனமகிழ்ந்து பவளக்கொடியாளை
பாலகியையுண்டுபண்ணார் பரமசிவனப்போது
பவளக்கொடியாளென்று பேரிட்டாரீஸ்பரனார்

அப்போ-சேராம்புராசாக்கள் துரைகளவரெல்லோரும்
பிள்ளைகலியினால் பெண்ணென்றுசொல்லாமல்
அவளை-யெடுத்துவந்துவளர்த்தார்கள் சேராம்புராசாக்கள்
பெண்ணென்றுசொல்லாமல் பிள்ளையென்றுதான்வளர்த்தார்
அவள்-மீறிநடந்தாளே மெல்லிருதுவானாளே
பிள்ளையென்றுசொல்லி பேர்மகுடஞ்சூட்டினர்
அந்தமுடிகொண்டாளுகிறாளிராச்சியத்தை
பதினாறுதன்வருஷம் பட்டமராசாண்டாள்
அவளைக்-கொள்ளவருவார்கள் கோடானகோடியுண்டு
அவளை-மாலையிடவந்தவர்கள் மட்டுமிதங்களில்லை
நித்தியகன்னியாகவே இருந்தாளின்னாள்வரைக்கும்
குருட்டான்குருகுலத்தான் குந்திமகனருச்சுனன்காண்
சந்தனவடிவழகன் தருமராசன்தம்பியவன்
தோழனும்ராசனுமாய்த் தேசத்தில்வந்தவரும்
பவளக்கொடியாளை பத்தினியைமாலையிட்டு
பதினாறுநாளாச்சு பத்தினியைமாலையிட்டு
அந்த-ஆனந்தவாழ்மாரி யவளாழகுள்ளராச்சியத்தை
இறாசமுடிதரித்து நலமுடனேயாளுகிறாள்
அவ்வார்த்தைகேட்டாளே அல்லிப்பெருமாளும்
சீறியெறிபறந்து சிங்கக்குட்டிபோலெழுந்து
கொக்கரித்துதானெழுந்தாள் கொல்லுங்குருவியைப்போல்
ஆடாதாதுவனே அழையுங்கள்வேடுவரை
காவலிலேவையுமென்றாள் கட்டழகவேடுவரை
மூன்றுநாளாறு பொழுதிலேவருவேனென்று
கை ந்தன்மேலாணையிட்டு வந்தாரேவாள்விசயன்
மாலையிட்டுக்கொண்டு வாழ்ந்திருகாநாளாச்சே
யமலோகம்போனாலும் யிட்டுவந்துசங்கரிப்பேன்
ஆகாயம்போனாலு மாறுய்ந்துகான்வருவேன்
பாதாளம்போனாலும் பார்த்துமேகொன்றிடுவேன்
எரிபறந்துகண்சிவந்துஎழுந்தாளேபத்தினியாள்
அப்போதுமாயவரு மறிந்தாரேயிவ்வண்ணம்
மோசங்கள்வந்து மூடிந்துதேயர்ச்சுனற்கு
ஒன்பதவதாரம் ஒங்கப்பிறந்தாரே
பத்தவதாரம் பாங்காய்ப்பிறந்தாரே
அப்படிப்பட்டதொரு அருச்சனராசாவை
சங்கரிக்கவல்லவோ நினைத்தாளேதையனல்லாள்
அண்டர்கள்வரத்தையெல்லாம் பெற்றவளாரணங்கு
சொக்கர்வலிமையுண்டு சுந்தரியாளல்லிபற்கு
அறிந்துமிருப்போமே அல்லிநல்லாள்தன்சமர்த்தை
ஏமார்ந்துநாமிருந்தா லிடுக்கம்வருமர்ச்சுனற்கு

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அல்லியரசாணியுடைய பாளையங்கள் எல்லாவற்றையுங் கொல்லும்படியாக கதண்டு குளவிகளை ஏகவிடுதல்.

என்றுஎழுந்தாரே எம்பெருமாள்மேகவர்ணர்
துவாரகையைவிட்டு ஸ்ரீராமர்வந்துவிட்டார்
மாய்கையாய்வந்துவிட்டார் வனமாய்வனந்தனிலே
கதண்டுகுளவிகளைக் கடுகவாவழைத்தார்
செங்குளவிகருங்குளவி சேரவரவழைத்தார்
அல்லியரும்புத்திரரு மிருவரையுந்தப்பவிட்டு
ஆனைகுதிரைகளை அடங்கவொண்ணுசேனைகளை
அத்தண்டபேரையு மல்லவரைக்கொல்லவென்று
என்றதுசொன்னர் எம்பெருமாள்மேகவர்ணர்

## கதண்டுகுளவி சேனைகளைக்கொல்வது.

மாயனுரைகேட்டு வருகுதுவண்டுகள்
பாளையத்தில்போய்புகுந்து பதைக்கவேகொல்லுகுது
கண்டதுண்டமாய்க் கடித்துமேபோடுகுது
ஈரல்பிடுங்குதே எல்லவரைக்கொன்றிடுதே
குடலைப்பிடுங்குதே குப்பையில்தள்ளுகுது
அம்மாடியத்தையென்று அலரிவிழுவாரும்
செத்துமடிந்தாரே சிவலோகம்போனரே
அல்லியரும்புத்திரரு மவ்விருவர்தப்பிவிட்டார்
மற்றபேரெல்லோரும் மாண்டுமடிந்தார்கள்
கண்டாளேயல்லியரும் கனத்தவிசாரமிட்டு
இதுவென்னபாவமிது ஏதுமறியேனே
அநீதமாகவே அனைவோரும்மாண்டார்கள்
எல்லோரையுந்தானெழுப்ப இளங்கொடியாள் தானினைத்தாள்
ஆலவாய்சொக்க ராண்டவனேவாருமென்றாள்
மதுரைமீனாட்சியம்மன் வாழ்மதுரைசொக்கரே
ஆபத்துதீர்க்கவே ஆண்டவனேவாருமென்றாள்
தொழுதுவணங்கியே தோத்திரம்பண்ணலுற்றாள்

## சொக்கலிங்கரும் மீனாட்சியம்மையும் வருகிறது.

சொக்கா துவரிந்து திடுக்கென்றுதானெழுந்து
அங்கயற்கண்மீனாட்சி ஆச்சியருந்தானெழுந்து
அல்லவரைத்தானெழுப்ப ஆண்டவருந்தான்வருவார்
மாயாதுவறிந்து வந்துவிட்டார்சொக்கரண்டை
என்னுடையமைத்துனரே எங்குநீர்போநீரோ
புருஷருக்தேவியுமாய் போறவயணமென்ன
அல்லியுடபாளையங்கள் அதமாய்மடிந்ததுநாண்
கதண்டுகொட்டிசெத்தவர்க்குக் கலனிபுலம்புகிறாள்

அல்லவரைநானெழுப்ப ஆயரேபோரேனென்றார்
மாயன்பெருமாளும வார்த்தைகளே துரைப்பார்
இதுவொருகாரியமாய் நீர்போரகாரணமேன்
அடியேனாலாகாதோ நானெழுப்பமாட்டேனா
என்னாலேயாகாதோ எழுப்பிவிடமாட்டேனா
மயிர்க்கால்முறியாதே மாதரிடசேனையெல்லாம்
எழுப்பிவிடுகிறேன் ஈஸ்வரரேதப்பாது
அரண்மனைகருப்போங்களென்று அனுப்பிவிட்டார்மாயவரும்

### ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அருச்சுனரை யழைப்பது.

சேரும்புராசாக்கள் சீமையிலேவந்துவிட்டார்
அச்சுதானந்தரும் அந்தநல்லவேளையிலே
காலையில்தாமெழுந்து நால்கைகள்சுத்திபண்ணி
பூங்காவனத்திற்குப் போகிறவேளையிலே
மாயன்பெருமாளை கண்டுவணங்கினார்
ஆயன்பெருமாளை அடிபணிந்தாரெல்லவரும்
வாள்விசயனெங்கேயென்று மாயவனார்கேட்கலுற்றார்
வம்பரவருச்சுனனா ரெங்கேயென்றார்மாயவரும்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளருகே
சதுரங்கமாடியே இருக்கிறான் தேர்விசயன்
வாள்விசயர்கோமானை வரவழைத்துவாருமென்றார்
அவ்வார்த்தைகேட்டுமவர் அச்சுதருமோடிவந்தார்
அருச்சுனனுந்தேவியரும் ஆசாரவாசலிலே
சொக்கட்டானாடுகிற வேளையில்தோழனவன்
கண்காட்டிதானழைத்தான் காண்டீபனருச்சுனனை
சைகையைத்தானறிந்து தேர்விசயன் தானெழுந்து
பூசைபண்ணிவாரேனென்று போய்நடந்தானருச்சுனனும்
அரண்மனைகளேழுகட்டு மந்தப்புறங்கடந்து
தெத்துகடந்து தெருவீதிவந்தபின்பு
ஆணழகனருச்சுனரே அரிராமர்வந்தார்காண்
மாயன்பெருமாளும் வரவழைத்தாருன்னையென்றார்
எங்கேயிருக்கிறார் எம்பெருமாள்சொல்லுமென்றார்
பிள்ளையார்கோவிலண்டை யிருக்கிறார்வாருமென்றார்

### அருச்சுனன் வருவது.

என்றதுகேட்டுமவர் யிளவிசயன் தான்பார்த்து
பூங்காவனம்புகுந்து புஷ்பமலர்பரித்து
மல்லிகைமுல்லை மலர்பரித்தோடிவந்து
மாயனிடபாதத்தில் வணங்கியேதெண்டனிட்டு
கொண்டுவந்தபூமலரைக் குபுகுபென் றுதான்சொரிந்தார்
முக்காலடிபணிந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
வந்துபணிந்தவனை வாழ்த்தியந்தமாயவரும்

### ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது.

தம்பியருச்சுனரே மன்னாயெழுந்திரென்றார்
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
மைந்தன்மேலாணையிட்டு வந்தீரேவாள்விசயா
மற்றுமொருகன்னியரை மணமாலைசூட்டினாய்
மகுடத்துரைச்சியவள் வன்காடிபொல்லாதாள்
வெட்டியெறிவாளே வீரமணிவாளாலே
கொல்லநினைத்தாளே கொம்பனையாள்மாதுகன்னி
வைகைநதியாள் வந்தாளேபடைகூட்டி
தண்டெடுத்துவந்தாளே தையலிளங்கொடியாள்
வடகோடிகானகத்தில் வந்துதண்டிறங்கியது
ஆயிரம்கூடாரம் அங்கேவந்துபோட்டார்கள்
என்செய்வீர்வாள்விசயா என்றார்பெருமாளும்

### அருச்சுனன் சொல்வது.

ஆனாலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
மதிமயக்கமாச்சுதே மாயவரேஎன்னசெய்வேன்
எங்கேயொளித்து இருப்பேன்காண்மைத்துனரே
நான்-எமலோகம்போவேனோ ஏழுலகங்கண்டவனே
நான்-பிர்மலோகம்போவேனோ பெருமாளேசொல்லுமென்றார்
நீ-சிவலோகம்போனாலும் தேர்விசயராசாவே
நீ-பிர்மலோகம்போனாலும் போய்பிடிப்பாளல்லியரும்
நீ-எமலோகம்போனாலும் இழுத்துவந்துசங்கரிப்பாள்
நீ-ஆகாயம்போனாலும் அம்புக்கிரையிடுவாள்
நீ-பாதாளம்போனாலும் போய்ப்பிடிப்பாளல்லியம்மாள்
இனியென்னசெய்வீர்காண் என்றார்பெருமாளும்
உன்-பாதாரவிந்தத்திலே பரகதிசேர்ந்திடுவேன்
நான்-செத்துமடிந்திடுவேன் ஸ்ரீராமர்நீயறிய
நான்-வல்லபிராணனை கல்லோடுமோதிடுவேன்
வேறேகதியில்லையென்று விழுந்தலறிதெண்டனிட்டான்

### கிருஷ்ணர் இருவரையு மாண்டவர்போல்செய்தது.

ஆயன்பெருமாளு மருளாளரப்போது
எந்நாளுமுந்தனிட பிடியோடாயெந்தனுக்கு
உன்னாலேயென்னபாக்கியம் உண்டுபலன்கண்டேனடா
என்றந்தமாயவரும் இருவரையுந்தானழைத்து
பவளநல்லகாட்டிலே பாரளந்தார்கூட்டிவந்து
அருச்சுனன்தன்னுயிரு மச்சுதன்தன்னுயிரும்
இருவர்உயிர்வாங்கி எம்பெருமாளடக்கிவைத்தார்
கதண்டுகொட்டிசெத்தவர்போல் கரியமாலுண்டுபண்ணார்
குடலைபிடுங்கியே குண்டிசரித்துவிட்டார்
வயிற்றைக்கிழித்து மணிக்குடலைதொங்கவிட்டார்

குத்திசரித்து குடலெல்லாந்தொங்கவிட்டார்
துண்டந்துண்டமாகத் துணித்தாரிருவரையும்
நாய்நரிகள்தீண்டாத நல்லிரும்புமேயாமே
சக்கரத்தைத்தானெடுத்து சுவாமியார்காவல்வைத்தார்
பத்திரமாயிருமென்று பாராளந்தாரப்போது

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி ஓலையெழுதுதல்.

மற்றுமொருமரத்தடியில் வந்துபெருமாளும்
சேமக்குருத்தோலை வாரியந்தமாயவரும்
வண்ணக்குருத்தோலை வாரியந்தமாயவரும்
பொன்னினெழுத்தாணி பொருந்தவேகைபிடித்து
ஒப்பனமாகவே ஓலையெழுதுகிறார்
சேராம்புராசாக்கள் சென்றெழுதும்பாவனைபோல்
வெற்றிமதயானை வீமனவன்தனக்கும்
நகுலசகாதேவ இராக்கள்யாவருக்கும்
மந்தாரக்குந்தியற்கு மாயன்பெருமாட்கும்
பாஞ்சாலன்பெற்றெடுத்த பதிவிரதைதுரோபதைக்கும்
ஆருயிரவ ரையன்மார்பாண்டியற்கும்
மகுடத்துரைச்சியவள் வாழ்வரசியல்லியற்கும்
மேகம்பயின்றெடுத்த மின்னொளிநாயகிக்கும்
நாகங்கள்யீன்றெடுத்த நாககன்னிமங்கையற்கும்
சோரவளநங்கை சுபத்திரைநாயகிக்கும்
ஊருமதயானை உத்தமர்கள்நூற்றுவர்க்கும்
அக்கத்தர்சுற்றத்தார் அனைவோருந்தானறிய
உறவின்முறையாரும் உள்ளவருந்தானறிய
வெள்ளிக்கிழமையில் விடியவைந்துநாழிகையில்
சேராம்புராசாக்கள் துரைகளிடபட்டணத்தில்
பவளம்வெட்டபோனிடத்தில் பார்த்திபனர்ச்சுனனும்
அச்சுதானந்த அன்புள்ளதோழனும்
கதண்டுகொட்டிமாண்டார்கள் கட்டழகரென்றுசொல்லி
சாவோலைதானெழுதி தலைபுரத்தில்சுட்டாரும்

ஸ்ரீகிருஷ்ணர் வெட்டியானாய் ஓலைகொண்டுபோகுதல்.

அப்போது-ஆயன்பெருமாளும் அருளாளரேதுசொல்வார்
வெட்டியானைப்போலாக வேடங்கொண்டாரெம்பெருமாள்
கம்பளியைப்போர்த்து கையில்தடியெடுத்து
தோட்டியைப்போலாகச் சாவோலைகைபிடித்து
ஓட்டநடையுமாய் வோடுகிறாரெப்பெருமாள்
அல்லிநல்லாள்தானிருக்கும் அவ்வழியேவாறாராம்
கண்டாளேதோட்டிதன்னை கட்டழகியல்லியரும்
பனிதருமில்லாதே மயங்குகின்றவேளையிலே
தோட்டியைக்கண்டவளும் துரைச்சியவளேதுரைப்பாள்



ஸ்ரீகிருஷ்ணன் வெட்டியானாக ஓலைகொண்டுபோகுதல்.

அண்ணாபடாதோட்டியென்று அழைத்தாளேயல்லியரும்
ஏனம்மாளென்னையழைத்தீர் என்றவனுந்தெண்டனிட்டான்
எவ்வூருதோட்டிநீ எனக்கரியச்சொல்லுமென்றாள்
சேராம்புராசாக்கள் சீமையின்தோட்டியென்றான்
எந்தவூர்பூமிக்கு ஓலைகொண்டுபோறீர்காண்
குருநாட்டுசீமைக்கு போரேனம்மாகொம்பனையே
குருகுலவம்மிசத்தில் குந்திமகனர்ச்சுனனும்
தருமரிடதம்பியாம் தனஞ்செயனர்ச்சுனனும்
வெற்றிமதயானை வீமருக்குத்தம்பியாம்
சேராம்புராசாக்கள் துரைகளவர்பெண்ணை
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளை
ஈதிறைநாளாச்சு பத்தினியைமாலையிட்டு
கதண்டுகொட்டிமாண்டுவிட்டான் காண்டீபனர்ச்சுனனும்
ஆகையினாலே அனுப்பினாரென்னையம்மா
ஓலைகொண்டுபோறேன்காண் வுத்தமியேயென்னாச்சி
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிவயரெறிந்து
ஓலையைத்தாரும் உத்தமனே பார்ப்போமென்றாள்
ஏந்திழையாள்முன்னெடுத்து ஈந்தான்மடக்கோலை
மடக்கோலைதானெடுத்து வாசித்துப்பார்த்தாளே
அதிலிருந்தமர்மமெல்லாம் அறிந்துபுலம்பலுற்றாள்
விரித்தாள்தலைகூந்தல் விட்டெறிந்தாளம்பலத்தில்
அப்பிகொண்டாளடிவயிற்றி லறைந்துகொண்டாள்திருமுகத்தில்
கோட்டையிடிந்தாற்போல் குத்திக்கொண்டாள்தன்வயற்றில்
பிச்சிகொண்டாள்மார்சதையை பிடித்துகொண்டாள்தலைமயிரை
கோவென்றசத்தமுடன் குமறிப்புலம்பலுற்றாள்
ஐயையோதெய்வமே அனியாயம்பண்ணீரே
எங்கேயோவானம் இடித்ததென்றிருந்தேன்
தப்பாதேவானம் தலையிலிடித்ததுவே
தண்டெடுத்துவந்தேனே சண்டையிட்டுப்போராட
உயிரோடிருந்தால் உற்றசண்டைபண்ணவேணும்
மடிந்தவர்தன்னுடனே வார்த்தைகளேனெந்தனுக்கு
என்-பத்தாவைபறிகொடுத்து பாரினில்நிற்பேனா
புருஷனைதானிழந்து பூமியிலேநிற்பேனா
கூடமடிந்திடுவேன் குவலயத்தினில்லாது
மாண்டுமடிந்திடுவேன் வையகத்தினில்லாது
தீப்பாய்ந்துபோவேனென்று சொல்லியழுதாளே
உடன்கட்டையேறுவேனென்று உருகியழுதாளே
அண்ணாவேதோட்டியடா அழகுமைந்தன்தாரேனடா
மைந்தன்புலந்திரனை யேந்திரீமன்னவனே
கொண்டுபோயென்மாமியிடம் குருநாட்டில்சேருமென்றாள்

பஞ்சவரைப்பெற்றெடுத்த பாவையாளென்மாமி
பாட்டியவள்கையிலே பாலனையொப்பியென்றாள்
அப்போதுதோட்டியவன் ஆரிழைக்குவதுசொல்வான்
அம்மா-அரண்மனைகளென்றால் அஞ்சுவோம்நாங்களம்மா
நான்-தந்தமடக்கோலை தையலரே தாருமென்றான்
மடக்கோலைதான்கொடுத்தாள் மாதுயிளங்கொடியும்
ஓலையைக்கைப்பிடித்து உத்தமனுந்தான்நடந்தான்

## புலந்திரன் சொல்வது.

போரஞ்சாமன்னன் புலந்திரனுமப்போது
மாதாவைப்பார்த்து மைந்தனுமேதுசொல்வான்
அம்மா-நானையாவென்றால் அடித்தாயேவாய்மேலே
இப்போ-ஆரென்றழுகிறீர் ஆனந்தவாழ்மாரி
புருஷன்மேல்சண்டைக்குப் போவாரோவையகத்தில்
நீ-தண்டெடுத்துபோகவே தனஞ்செயனார்மாண்டுவிட்டார்
நீ-வாளெடுத்துப்போகவே அவர்வைகுந்தஞ்சேர்ந்தாரே
நான்-பவளத்தேர்கேட்ட பாவமல்லோவென்தாயே
கேளாமல்நானிருந்தால் சுகமாயிருப்பாரே
எனக்காகயிங்குவந்து என்தகப்பன்தான்மடிந்தார்
என்தகப்பன்தன்னுடனே என்னுயிரைநான்மடிப்பேன்
என்தகப்பன்மாண்டு இனியிருக்கேன்பூமியிலே
நான்-இப்பவேயென்னுயிரை இழக்கிறேன்மாதாவே
நான்-ஐந்துவயதம்மா அறியாதபாலனுக்கு
இந்தவிதியெனக்கு ஈஸ்வரனார்கட்டளையோ
என்று-மண்ணில்விழுந்து மைந்தன்புரண்டழுதான்
அப்போ-மைந்தனழுகிற பரிதாபந்தான்பார்த்து
ஐயோசிவனேயென்று அழுகிறபாலன்தன்னை
நாயகியாள்சென்றெடுத்து நல்லதுதம்பியரே
அப்பாமகனே அறிவுள்ள கண்மணியே
இந்தவயதிலே ஈஸ்வரனார்கட்டளையோ
அறியாதபாலனுக்கு அமைத்தாரேயித்துயரம்
இப்போ-பழிகாரியானேனே பாலன்புலந்திரனே
என்று-ஆறாததுக்கமுடன் அழுதுகொண்டுதானிருந்தாள்

## கிருஷ்ணர், தருமருக்கு ஓலைகொடுத்தது.

தோட்டியுமான துவாரகாபுரிவாசன்
சில்லென்றநாடுகள் செடிகள்வனங்கடந்து
காடுகடந்து கரியமலைதான்கடந்து
அண்ணாமலையி லசைந்துவருங்காவேரி
வண்டாமலைமரங்கள் வனங்களெல்லாந்தான்கடந்து
துங்கபத்திரிகாடு தொடர்ந்தாரேதோட்டியரும்

குருநாடுதேசத்தில கொற்றவனும்போய்புகுந்து
அன்புடையதருமரவர் அரண்மனைக்குமுன்னேவந்து
கொற்றவனார்தருமரவர் கொலுவுக்குமுன்னேவந்து
கைகட்டிநின்றவனுங் கடுகெனவேதெண்டனிட்டான்
தயவாகத்தோட்டிமுகம் தர்மருந்தான்பார்த்து
யாருடையதோட்டிநீ யென்றாரே ஆணழகர்
நான்—சேரராம்புராசாக்கள் தேசத்துத்தோட்டியென்றான்
இங்கேநீவந்ததென்ன எனக்கறியக்கூறுமென்றார்
சொன்னவுடனேயவன் சுருளோலைகைகொடுத்தான்

### தருமர்முதலிய யாவரும்புலம்பல்.

மடக்கோலைகட்டவிழ்த்து வாசித்துப்பார்த்தவரும்
அதிலிருக்குஞ்செய்தியெல்லாம் அறிந்தாரே தர்மலிங்கம்
வாய்மூடிதருமரவர் வயிறெரிந்துபுலம்பலுற்றார்
மாளவோதம்பியரே உன்னையனுப்பிவைத்தேன்
செல்வத்திருமுகமே தேர்விசையனருச்சுனரே
என்-கட்டிக்கரும்பேநீ கருவிளமேயெங்கொளித்தாய்
தேடக்கிடையாத திரவியமேயெங்கொளித்தாய்
சுவரிலெழுதவொண்ணாச் சித்திரமேயெங்கொளித்தாய்
படத்திலெழுதவொண்ணா பார்த்தீபாயெங்கொளித்தாய்
உன்னைப்பிரிந்துநான் இருப்பேனோபூமியிலே
நானெப்படிமனந்துணிந்து இருப்பேனோவாள்விசையா
என்றதுசொல்லியே யேங்கியழுகலுற்றார்
வெற்றிமதயானை வீமசேனன்கேட்டு
விம்மியழுதானே விழுந்துபுரண்டழுதான்
கூவியழுதானே கொற்றவனுமப்போது
நகுலனதுகேட்டு நலமுடனேயோடிவந்து
மடிந்தீரோ அண்ணாவென்று மண்ணில்புரண்டழுதான்
செத்துமடிந்தீரோ சிவலோகம்போனீரோ
மாண்டுமடிந்தீரோ வைகுந்தம்போனீரே
உன்னையும்விட்டுநான் இருப்பேனோபூமியிலே
என்று-தரையிற்புரண்டழுதான் தாக்குடையநகுலனவன்
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவன்தான்கேட்டு
அண்ணாவேயென்று அழுதுபுலம்பலுற்றான்
குந்தியம்மாள்தான்கேட்டு குஞ்சரமேயென்றழுதாள்
ஐயோமகனேயென்று அழுதுபுலம்பலுற்றாள்
பாஞ்சாலன்தன்மகளும் பத்தினியாள்துரௌபதையும்
மாரிழவுகொண்டு மயிரைவிரித்துங்கொண்டு
ஏங்கியழுதாளே இடைதாவடம்புரள
அன்னகரிலுள்ளோர் அனைவோருந்தானழுதார்
வர்த்தகரும்வாணியரும் வந்துதுக்கங்கொண்டார்கள்

திக்கெட்டுஞ்சீட்டெழுதித் தேசமெங்குமோட்டெழுதி
மாரிழவுகொண்டார்கள் மகாசேனையுள்ளவரும்
அங்கவர்கள் துக்கம் அழுதுவந்து கண்டார்கள்
எல்லோருங்கூடியே இறைந்தழுதுகூச்சலிட்டார்
கட்டியழுதார்கள் கடலிறையும்வெள்ளம்போல்
எல்லையளந்த எம்பெருமாள் தான்பார்த்து
குஞ்சிரிப்புகொண்டு குலுங்கமிகநகைத்து
நீங்கள் கடவுங்கள் என்றுரைநீலவர்னர்

## தருமர்முதலியயாவரும் பவளக்காட்டிற்குவருவது.

அப்போது தருலிங்கம் அவசரமாய்த்தானெழுந்தார்
தம்பிமார்மூவரும் தானும்நடக்கலுற்றார்
குந்தியம்மாள் தானும் கூடநடக்கலுற்றார்
பத்தினியாள் துரோபதையும் மற்றுமுள்ளவேதியரும்
சங்கவதியம்மாள் தானும்நடக்கலுற்றாள்
பல்லக்கின்மேலேறி நடந்தார்பலபேரும்
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
நோங்குபருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
சிங்கமுலாவுவனஞ் சிறுபுலிகள் தூங்குவனம்
யாளிகள்வாழுமந்த அவ்வனத்தைதான்கடந்தார்
மயிலோசைகேட்குமந்த மாந்தோப்புந்தான்கடந்தார்
அண்டரறியாத தண்டவனங்கடந்து
வேந்தரறியாத வெளிக்காடுதான்கடந்து
சந்திரசூரியர்கள் காணாவனங்கடந்தார்
அல்லியம்மாள் தானிருக்கு மவ்வனத்தில்தான்வந்தார்

## தருமர் புலந்திரனையழைப்பது.

தாரார்புகழுடைய தருமர்பெருமாளும்
கண்டார்புலந்திரனை கண்மணிபுலந்திரனை
அப்பாபுலந்திரனே அழகுள்ள கண்மணியே
தேனேபசுங்கிளியே தெவிட்டாததெள்ளமுதே
கண்ணேநவமணியே கற்கண்டேசர்க்கரையே
சொக்கநாதர்கோவிலுக்குத் தூண்டாமணிவிளக்கே
என்-தம்பிபுலந்திரனே தனிவிசயன் புத்திரனே
வைகைகரைதனக்கு மண்சுமந்தசொக்கரே
ஆறாயிரம்பாண்டியர்க்கு அழகானபேரனையா
வாருமகனேயென்று வாரியெடுத்தணைப்பார்
தம்பிநீவாடாயென்று தழுவியெடுத்துரைப்பார்
போரஞ்சாமன்னன் புலந்திரனுந்தான்பார்த்து
பெரியப்பாவென்று பிரியமுடன்தெண்டனிட்டான்
அண்ணாவேயென்று அடிபணிந்துதெண்டனிட்டான்
வந்துபணிந்தவனை வாரியெடுத்தணைத்து

வாழ்த்தியெடுத்து மகனைமடியில்வைத்து
கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டு
மைந்தன்புலந்திரனை மன்னவனுந்தான்பார்த்து
என்-தங்கக்களஞ்சியமே தார்வேந்தர்பூஷணமே
அரியசிரோன்மணியே அருச்சுனனாரெங்கேயென்றார்

புலந்திரன் சொல்வது

போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறுவான்
ஐயாவேநீர்கேளும் அடைவாகச்சொல்லுகிறேன்
எங்கள்-பாண்டிவளநாட்டாளை பவளத்தேர்கேட்டேனப்பா
பாண்டிவளநாட்டில் பவளங்கிடையாது
எனக்குதோஷித்ததென்று எழுதியேஓலைவிட்டாள்
கலை தாங்கிபோச்சுதென்று கன்னியெழுதிவிட்டாள்
அப்போதுஐயரும் அவரிங்கேவந்தாரையா
ஐயரைநானும் பவளத்தேர்கேட்டேனையா
எடுத்துமடியில்வைத்து என்கண்ணேநல்லதென்றார்
எப்போவருவீரென்று யான்கேட்டேனையாவே
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
என்பேரிலாணையிட்டு எழுந்தருளிப்போனாரையா
சேராப்புகானகத்தில் செத்துமடிந்தாரையா
பவளத்தேர்கேட்டுநான் பழிகாரனானேனையா
சும்மாவிருந்தேனானால் சுகமாயிருப்பாரையா
ஐயாவேயென்று அலறினான்பாலகனும்
தாரார்புகழுடைய தருமரவர்கேட்டு
பாலன்புலந்திரனைப் பார்த்துபுலம்பலுற்றார்
அறிவுள்ளஐயாவே ஐயாவேயென்றழுதார்
வெற்றிமதயானை வீமனும்பார்த்தழுதான்
நகுலசகாதேவரென்னும் ராசர்புலம்பலுற்றார்
அங்கவர்களெல்லோரும் அழுதுபுலம்பலுற்றார்
தாரார்புகழுடைய தருமர்பெருமானும்
மதுரையையாளுகின்ற மாதுமுகம்நோக்கி
மைந்தரும்நீருமாய் வந்ததென்னசொல்லுமென்றார்

அல்லியரசாணி சொல்வது.

பிறவாமுடி தரித்த பெண்ணரசிசொல்லலுற்றாள்
வந்தேன்மதிலோலைந்தேன் வீதியினிடதன்வசத்தால்
முன்னேநடந்த முறையெல்லாம்சொல்லலுற்றாள்
போரஞ்சாமன்னன் புலந்திரவீரியனும்
பவளத்தேர்வேணுமென்று பலபேரைநான்கேட்டேன்
சேரும்புகானகத்தில் உண்டென்றார்செம்பவளம்
எங்களாலாகாது எடுத்துவருவதற்கு
அருச்சுனராசாவால் ஆகுமென்றாரெல்லவரும்

மைந்தன்புலந்திரற்கு மகாபயம்வந்ததென்று
ஓலையெழுதியெ வுத்தமரே அனுப்பிவைத்தேன்
அதனாலே அர்ச்சுனரும் ஐயரிங்கேவந்தாரையா
பாலனபுலந்திரனும பவளத்தெர்கேட்டானையா
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
மைந்தன்மேலாணையிட்டு மன்னவரும்போனார்நாண்
பதினறுநாளாயும் பார்த்தன்வரவில்லையென்றாள்
ஆரோவுயித்தியங்கள் பண்ணுகிறாரென்றுசொல்லி
தண்டுதளமெடுத்து வந்தேன தனஞ்சயரே
மதுரைப்படைத்தலைவா மகாராசரத்தனையும்
ஆனைகுதிரைகளும் அண்டவொண்ணாச்சேனைகளும்
கதண்டுகுளவிவந்து கொட்டிமடிந்தது
மைந்தனும்நானும் மரம்போலநின்றுவிட்டோம்
என்று-தருமரதுபாதத்தில் தான்விழுந்துதெண்டனிட்டு
என்னசெய்வேனென்று ஏங்கிமிகவழுதாள்
மைந்தன்புலந்திரனை வைததுவளர்த்திடுங்கள்
எடுத்துவளர்த்திடுங்கள் என்றந்த அல்லியம்மாள்
தீப்பாய்ந்துபோவேனென்று சொல்லிபுலமபலுற்றாள்
பாருளுந்தருமலிங்கம் பாாத்துமிகவழுதார்
மோதிரக்கையை முகத்தோடேவைத்துக்கொண்டு
மெத்தப்புலம்புகிறார் வேந்தர்தருமலிங்கம்

## கிருஷ்ணன் அர்ச்சுனன் இறந்துவிட்டதைக்காட்டுதல்.

எல்லையளந்தவொரு எம்பெருமாள்தான்பார்த்து
ஏன்காணமுகிறீர்கள் இப்பெரியகானகத்தில்
மன்னவரருச்சுனனார் மாண்டவிடங்காட்டுகிறேன்
என்றுசொல்லிமாயவரும் எல்லோரையுமழைத்துவந்து
வாளவிசயன்பிணத்தை வகையாகக்காட்டலுற்றார்

## தருமர்முதலிய யாவரும்புலம்பல்.

தக்கப்புகழுடைய தருமர்பெருமாளும்
விசையர்திருமுடியை வேந்தர்வரவழைத்து
காண்டீபன்தன்முடியைக் கண்மலரிலொற்றிக்கொண்டு
தம்பியடாவென்று தருமர்மிகவழுதார்
வீமரவர்பார்த்து மிகவும்புரண்டழுதார
நகுலசகாதேவ ராசர்புலம்பலுற்றார்
அண்ணாவேயென்று அழுதுபுலம்பலுற்றார்
மந்தாரக்குந்தியம்மாள் மாதுபுலம்பலுற்றாள்
சங்கோதியம்மாள் பார்த்துபுலம்பலுற்றாள்
பாஞ்சாலன்பெற்றெடுத்த பத்தினிதுரோபதையும்
என்னை-மாலையிட்டமன்னவரே மடிந்தீரோகானகத்தில்

என்றந்ததுரோபதையும் ஏங்கியழுகனுற்றாள்
மதுகூரத்துறைச்சி மாதுநல்லாளல்லியரும்
காண்டீபனருச்சுனனைக் கண்டுமனங்கொதித்து
பார்த்துமேமாரடித்துப் பைங்கிளியுந்தானழுதாள்
கூடமடிவேனையா கொற்றவனேஎன்றுசொல்லி
மெத்தப்புலம்புகிறாள் மெல்லிநல்லாளல்லியரும்
அச்சுதன் தங்கை ஆரணங்குசுபத்திரையும்
என்-கண்ணனைமைத்துனரே காண்டீபனருச்சுனரே
உம்மைவிட்டுநான்பிரிந்து இருப்பேனோபூமியிலே
மாண்டுயிருக்கிறது மன்னவனே நீதியுண்டோ
இனியிந்தசீவனை இழக்கிறேனென்றழுதாள்
கோவென்றழுதாள் கோபாலன்தங்கையவள்
தேவிமாரெல்லோருந்,தரந்தரமாய்த்தானழுதார்
போரஞ்சாமன்னன் புலந்திரனுமப்போது
அந்த-பாராளுந்தருமரைப் பார்த்தந்தபாலகனும்
ஐவருடன்கூட ஐயாவேநான்மடிவேன்
நான்கூடமடிவேனென்று குழந்தையழுகிறானும்
பாலனழுகிற பரிதாபந்தான்பார்த்து
மைந்தன்புலந்திரனை மன்னவருந்தான்பார்த்து
அறியாதபாலகனே அறிவுள்ளவப்பாவே
இந்தத்துயரமும் வருவானேனுந்தனுக்கு
இது-மாயர்மருத்துவமோ மன்னவனே நாமறியோம்
என்று-மைந்தனைத்தானணைந்து மன்னவருந்தானழுதார்
வெற்றிமதயானை வீமனவன்பார்த்தழுதார்
நகுலசகாதேவ ராசாக்கள்தானழுதார்
முத்துமுடிதரித்த முருகுழலாள்புத்திரனை
கட்டியழுதார்கள் கடலுடைந்தவெள்ளம்போல்
கூட்டியழுதார்கள் கொம்பனைமாரெல்லோரும்

### சேராம்புராசாக்கள் பவளக்கொடியாளை அருச்சுனராசன் எங்கேயென்று கேட்குதல்.

சேரம்பராசாக்கள் தெருவிலுலாவுகையில்
வடகோடிகானகத்தில் வருவானேன்கூச்சலென்று
ஐம்பதுபேருமாய் அரண்மனைக்குள்ளேவந்து
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளை
மாப்பிள்ளையயனும் மன்னவனுரெங்கேயென்றார்
பூசைபண்ணிவாறேனென்று போனாரவர்கானகத்தில்
வடகோடிகானகத்தி லென்னமோகூச்சலென்று
அஞ்சலிலேதூதுவரை அனுப்பிவைத்தாரப்போது
அப்போதுதூதுவர்கள் அடுத்தார்களவ்வனத்தை .

மாப்பிள்ளைராயர் வைகுந்தஞ்சேர்ந்தார்காண்
பூசைபண்ணிவாறேனென்று போனாரவர்கானகத்தில்
வடகோடிகானகத்தி லென்னமோகூச்சலென்று
அஞ்சலிமேலதூதுவரை அனுப்பிவைத்தாரப்போது
அப்போதுதூதுவர்கள் அறிந்தார்களவ்வனத்தை
மாப்பிள்ளைராயர் வைகுந்தஞ்சேர்ந்தார்காண்
ஓடிவந்தார்தூதுவர்கள் ஒருநொடிக்குள்ளாக
தூதுவரும்வந்து தொழுதுமேதெண்டனிட்டு
மாப்பிள்ளைராயர் வைகுந்தஞ்சேர்ந்தார்காண்
அவர்களுடசேனைகளும் அனைவோரும்வந்திறங்கி
கட்டியழுகிறார் தானநங்கொள்ளவில்லை

சேராம்புராசாக்கள் வருவது.

ஐம்பதுபேராசாக்கள் அபயம்சிவாயமென்று
அவரை-முன்னறியேன்பின்னறியேன் மும்மூர்த்திபானவரை
அனியாயமென்றுசொல்லி அருஞ்சிறையாவதென்ன
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
ஐம்பதுபேராசாக்கள் அவர்களிடதேவியரும்
எல்லாருங்கூடியே ஏகனுற்றார்கானகத்தில்
கானகத்தில்வந்து கதும்பிமிகவழுதார்

பவளக்கொடியாள் புலம்பல்.

கட்டியழுதார்கள் கடலுடைந்தவெள்ளம்போல்
அப்போ-பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
பதினைந்துதன்வருஷம் பாவிசிறையிருந்தேன்
இந்தப்பழமொழியா ஈஸ்வரரேயிங்குவந்து
என்னை-மாலையிடச்சொல்லி மயக்கமல்லோபண்ணீரே
அப்படியேமாலையிட்டேன் அருச்சுனரைநானுமிப்போ
அண்டமுலகளந்த ஆயர்பெருமாளே
நீ-எத்தனைநாள்காத்திருந்தீர் என்னைச்சிறையில்வைக்க
எத்தனைபேராசாக்கள் வந்தார்கள்மாலையிட
நான்—யாருக்குமாலையிடே னென்றிருந்தேனிப்போது
அருச்சுனரைமாலையிட்டு அருஞ்சிறையானேனே
ஐயையோதெய்வமென்று அலறியழுகிறாள்
அப்போதுஎம்பெருமாள் ஆயரவர்பார்த்து
மதுரைதுரையல்லியரின் மனதைக்கலக்கிவிட்டார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகியும்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளை
உற்றுப்பார்த்து உளமுமிகக்கலங்கி
வாலைப்பிராயம் வயதுபதினாறிருக்கும்
வேரிற்பவளம் மின்னுகிறகாந்தியைப்போல்

கோடிசூரியப்பிரகாசம் போலேயிருக்கிறாள்
இவைகளெல்லாந்தானறிந்தாள் இளங்கொடியாளல்லியரும்
வாள்விசயன்தோள்மேலே மாலையிட்டாளுத்தமியும்
நான்-காணாதகாட்சியெல்லாங் கண்டோமிதுநெடுநாள்
பதினாறுநாளையிலே பாவிசிறைவைத்தார்காண்
என்றுசொல்லியல்லியரும் யேங்கியழுதாளே
தோராவடிவழகி துரோபதையுந்தான்கேட்டு
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளை
கட்டியழுதார்கள் கமலப்பூநாயகியை
அப்போது-ஐம்பதுபேராசர்களு மவர்களுந்தானழுவே
ஆறுயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
எல்லோருங்கூடியே யிசைந்தழுதுகூச்சலிட்டார்
அங்கவர்கள்துக்க மடங்கினபிற்பாடு
தக்கபுகழுடைய தருமாவரேதுசொல்வார்
இறந்ததோரருச்சுனனு மினிதிரும்பப்போறதில்லை
மாண்டதோரருச்சுனனு மறுபடியும்வாறதில்லை
என்தம்பியைத்தானெடுத்து தகனங்கள்செய்யவேணும்
ஆராரைக்கூட்டி அனுப்புவதுசொல்லுமென்றார்
அப்போது அல்லியரும் அரசர்க்கெடுத்துரைப்பாள்
ஆதினகர்த்தாவே,ஐயாவேநான்பாவி
ஐவருக்குப்பொதுவல்லோ ஆரணங்குதுரோபதையும்
மேகத்தில்வந்துதித்த மின்னொளிநாயகியாள்
பார்ப்பான்மகளான பரிவுடையபோகவதி
நாகம்பயின்றெடுத்த நாகக்கன்னிநாயகியும்
அச்சுதன்தங்கை ஆரணங்குசுபத்திரையும்
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
அன்னநடைமாதர்களை அக்கினியில்தள்ளுமென்றார்
அப்போது-ஐம்பதுபேருமாய் அனைவருமோடிவந்து
தாரார்புகழுடைய தருமாடிவணங்கி
எங்கள்-ஐம்பதுபேராசருக்கும் ஆண்டிருக்கபிள்ளையில்லை
நாங்கள்-ஐம்பதுபேராசர்களும் அருந்தபசுபண்ணுகையில்
எங்கள்-பாவருக்கும்பிள்ளையில்லை என்றந்தஈஸ்வரனார்
பவளக்கொடிமேலே யுண்டுபெண்ணார்பாலகியை
பிள்ளைகலியினால் பெண்ணென்றம்பாராமல்
பெண்ணென்றுசொல்லாமல் பிள்ளையென்றுநான்வளர்த்தேன்

பிள்ளையென்றுசொல்லி பெண்மகுடஞ்சூட்டினோம்
வண்ணலட்சங்கோடியுண்டு மாலையிடவந்தவர்கள்
மற்றொருவர்கையில் மணமாலைதீண்டேனென்று
நித்தியகன்னியாகவே இராச்சியத்தையாண்டிருந்தாள்
பதினொருநாளாச்சு பாவிவந்துமாலையிட்டு
அப்படிப்பட்ட அரசரையனுப்பிவிட்டு
தியங்கியிருப்போமோ திருமகளைத்தானிழந்து
எங்களைக்கூடவே யிளவரசேதள்ளுமென்று
ஐம்பதுபேராசர்களும் அவர்பாதம்போய்ப்பணிந்தார்
தாரார்புகழுடைய தருமரவர்பார்த்துமல்லோ
பாராளுந்தருமரந்தப் பரிதாபம்பார்த்துமல்லோ
மோதிரக்கையை முகத்தோடணைந்துக்கொண்டு
மகாராசர்தருமரவர் வயிறெரிந்துமனங்கலங்கி
என்னசெய்வேன்வாள்விசயா என்றுமிகவழுதார்
அந்நேரவேளையிலே அரிராமரேதுசொல்வார்

ஸ்ரீகிருஷ்ணர் வைத்தியனாய்வருவது

பாராளுந்தருமரிட பரிதாபம்பார்த்துமல்லோ
எழுமலையளந்த எம்பெருமாளப்போது
எழுப்பிவிடவேணுமென்று யெம்பெருமாள்தானெழுந்து
மாயன்பெருமாளும் மனமகிழ்ந்துவாரார்காண்
மடிந்தமடிப்புரளும் மாணிக்கத்தெர்ப்பைகளும்
பொன்னூல்மிதியடியும் பொந்திக்கோல்கைபிடித்து
வைத்தியன்போலாக மருந்துபையைதோளில்வைத்து
ஆடாமன்னவனே யாரவர்கானகத்தில்
எவர்காணுமிங்கே இறைச்சலென்ன கானகத்தில்
அப்போதருமர் அரசாளும்ராசதுரை
நாங்கள்-ருருநாடுசீமை கூச்சல்வந்ததென்றுசொன்னார்
தர்மரென்றுசொல்லுவார் நீதானோதார்வேந்தா
ஆமையாநான்தான் அவதிப்படுகிறேன்
மாண்டதொருமன்னன் மன்னவனேயார்காணும்

வைத்தியருக்கு தர்மர்சொல்லியது

என்னோடேதான்பிறந்த எழில்விசயனர்ச்சுனர்காண்
மாண்டதொருமன்னர்க்கிந்த மாதரெல்லாம்வரிசையென்றார்
தாயாருக்குந்நியம்மாள் தங்கையவள்சங்கோதி
இவ்விருவர்தான்தவிர இயலானஐயாவே

மற்றொருமாதரெல்லாம் மன்னனிடதேவியர்கள்
சிவசிவாவென்றசொல்லி திருச்செவியில்கையைவைத்து
கண்மூன்றமில்லையோ கைலாசநாதருக்கு
என்றுஉலகளந்த எம்பெருமாள்மனமுருகி
வானவர்கள்தேவருக்கும் வைத்தியனானகாணும்
கதண்டுகொட்டிமடிந்தவரை எழுப்பித்தருவேனென்றார்
இறந்தவொருமன்னவனை யெழுப்பிவிட்டோமாகில்
எனக்கென்னகொடுப்பீர்காண் யென்றார்பெருமாளும்

தருமர் சொல்வது.

அப்போதுதர்மர் அதிகமனமகிழ்ந்து
அப்படியேநீரும் எழுப்பிவிட்டீராமாகில்
அண்டக்குருநாடு அடங்கலுமுமதென்றார்
அப்படியேசொன்னாலாகாதுஐயாவே
எழுதித்தரவேணும் என்றாரேயெம்பெருமாள்
தாமமுடியார் தர்மரெடுத்துரைப்பார்
அந்தகுருநாடும் ஐந்துபங்காய்பங்கிட்டு
நால்வரிடபங்கை நானெடுத்துதாரேனிப்போ
வில்லாளிபார்த்தன் விசயன்பிழைத்தாக்கால்
அவன்-தந்தானேயாமாகில் தார்வேந்தாவாங்கிக்கொள்ளும்
எல்லையளந்த எம்பெருமாள்தான்கேட்டு
சந்தோஷப்பட்டு தன்மனதில்தானடங்கி
மதுரைநகராளும் மாதுமுகம்நோக்கி
உன்-பத்தாவைத்தானெழுப்பித் தாரேனான்பைங்கிளியே
என்னதருவாய் என்றாரேயெம்பெருமாள்
அப்போது அல்லி ஆரணங்குமேதுசொல்வாள்
என்-வாழ்பாண்டிநாடு மதுரைப்பதினாயிரமும்
என்-அக்ரகாரநாடும் அடங்கலுமுன்னாதென்றாள்
அப்படிக்குச்சொன்னால் ஆகாதுஆரணங்கே
எழுதித்தரவேணும் என்றாரேயெம்பெருமாள்
அப்போதுஎம்பெருமான் அதிகமனம்பூரித்து
ஆயருமப்போது அர்ச்சனரைச்சுற்றிவந்து
வலையத்திரைபோடும் என்றாரேயெம்பெருமாள்
வலையத்திரைநடுவில் மன்னவரைகொண்டுவந்து
எடுத்துநிறுத்துமென்றார் யெம்பெருமாள்மேகவர்ணர்
எடுத்துநிறுத்தினார் யியலானமன்னவரை
பாலுடன்தேனும் பசுவினெய்வேணுமென்றார்

## அப்படியேகொண்டுவந்து கொடுத்தார்களப்போது

### வைத்தியர் சொல்வது.

ஓமம்வளர்த்தி உலகளந்தமாயவரும்
காயம்பட்டமேனியெல்லாங் கையாலேதான்தடவி
மற்றுமொருவிணைவாய் மாயவருமேதுசொல்வார்
பெண்டுகளைப்பார்த்தால் பொறுக்கமுடியாது
வசைபண்ணும்பெண்டுகளை உறுதிபண்ணிதாருமென்றார்
அப்படியேநல்லதென்று அரசரந்ததர்மதுரை
கால்வேறுகைவேறாய் கடுகக்கிடத்திவைத்து
எமலோகம்போனவுயி ரிட்டுவந்தேனிப்போது
வந்ததொருசீவன் வைகுந்தம்போகுதுகாண்
எடுத்தடக்கிக்கொள்ளு மென்றல்லோஎம்பெருமாள்
எழுந்துநடந்தாரே எம்பெருமாள்மேகவர்னர்
அபபோதுதர்மரவர் அவர்பின்னேதானடந்தார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்பின்னோட
முன்னோடிவந்தவுடன் பெருமாளுநின்றல்லோ
செந்தாமரைபுட்பம் தேவிதனைநோக்கி
வாள்விசயனருச்சுனனை வதையுரான்றம்பண்ணேனென்று
நிச்சயமாய்சொன்னால் நிசமாயெழுப்பிடுவேன்
என்றுரைக்கமாயவரு மேந்திழையுஞ்சொல்லுவாள்
எங்கள்ஆருயிரவர் ஐயமார்தம்மானை
அங்கயற்கணம்மை அவருடையசீர்பாதம்
என்சீவனுள்ளகாலமெல்லாம் தீண்டேனருச்சுனனை
என்றுசொல்லமாது எம்பெருமாள்சம்மதித்து
சோரவளநங்கை சுபத்திரையைத்தான்பார்த்து
நீஎன்னசொல்லுமென்றார் நிகரில்லாமாயவரும்
எங்களண்ணனுடசீர்பாதம் அவரைநான்தீண்டவில்லை
அலைமோதுபாற்கடலில் பள்ளிகொள்ளுமச்சுதர்காண்
நீஇட்டதோராணை எனக்குமிகப்பாரமல்லோ
சூடாமணிக்கடகத்தில் இருக்கின்றபூதமது
அதை-விட்டுவிட்டாயானால் விசயனெழுந்திருப்பார்
மாட்டேனென்றுசொல்லி மறுத்தாள்சுபத்திரையும்
ஆணைமறந்தாளே ஆரணங்குசுபத்திரையும்
அப்போ-பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
கோபந்தணலாகி கொமபனையாளப்போது
விடுகிறையோயில்லையோ வேல்பொருதுங்கண்ணாளே
உன்னொருத்திக்குமன்னர் உயிரிழந்துபோனக்கால்
நாங்களத்தண்டபேரு மருஞ்சிறையாவோமடி

என்றசொல்லியர்ச்சுன ராசனை தானெழுப்ப
பூதத்தைவிட்டாள் பொற்கொடியாள்சுபத்திரையும்

### வைத்தியனாகிய கிருஷ்ணர் அர்ச்சுனனையெழுப்புதல்.

அப்போதுஎம்பெருமா னங்கமிகக்குளிர்ந்து
அர்ச்சுனராசனை சுற்றிவந்துமாயவரும்
தட்டியெழுப்பினர் தனஞ்செயாருச்சுனரை
அண்ணரிடபாதம் அடிவணங்கிதெண்டனிட்டான்
வாரியெடுத்து மார்போடேதானணைத்து
நீர்-வைகுண்டம்போனீரோ வாள்விசயனர்ச்சுனரே
ஆகாயம்போனீரோ ஆணழகாவர்ச்சுனரே
என்று-கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டு
என்னையாவென்று தருமருஞ்சொல்லிக்கொண்டார்
அப்போதுவாள்விசய னடிதொழுததானெழுந்து
குந்தியம்மாள்பாதம் கொற்றவனுக்தெண்ட னிட்டான்
குந்தியம்மாள்தானுங் கொற்றவனைத்தானெடுத்து
கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டாள்
வெற்றிமதயானை வீமனவன்பார்த்து
விசையனருச்சுனனை வேல்பொருதுங்கண்ணாளன்
அவன்-கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டு
வேலபொருதுங்கண்ணா விசையாநீஎங்கேபோனாய்
சீனிசருக்கரை செல்வமெபெண்குபோனாய்
என்றுமேவீம னிருந்தானகமகிழ்ந்து
நகுலசகாதேவர் இருசமூடிமன்னவர்கள்
அண்ணாவேயென்று அருச்சுனரைக்கட்டிக்கொண்டார்
பொங்கிமனமகிழ்ந்து புகழ்வேந்தர்தாமிருந்தார்
மைந்தன்புலந்திரனு மன்னவனுமப்போது
அர்ச்சுனர்பாத மடிவணங்கிதெண்டனிட்டான்
தெண்டனிட்டமைந்தனை தேர்விசையர்தானெடுத்து

### அருச்சுனர் புலந்திரனைக்கேட்டது.

வாழ்த்தியெடுத்து மடியின்மேல்வைத்துக்கொண்டு
முகத்தோடேமுகம்வைத்து முத்தமிட்டுபாலகனை
என்தங்கமுடிபெற்ற தார்வேந்தன்புலந்திரனே
ஏன்வந்தாயிங்கேயென்று யெழில்விசையர்தான்கேட்டார்

### புலந்திரர்சொல்வது.

அப்போதுபுலந்திரனும் அர்ச்சுனர்க்குசொல்லுற்றான்
குருநாட்டில்தானிருந்து கொற்றவரேநீங்களுந்தான்
மதுரைக்குத்தாங்கள்வந்து மன்னவரேயிப்போது
பவளத்தேர்சொப்பனிட்டு கொண்டுவாரேனென்றசொல்லி
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
பதினாறுநாளாச்சு பார்த்தர்வரவில்லையென்று
எங்கள்மாதுநல்லாளல்லியரும் வந்தாள்படையெடுத்து

அந்ததாமமுடியாளும் தண்டுதளமெடுத்து
எங்களையர்போனவழி யிதுதானோவென் றுகேட்டேன்
ஐயரென் றுசொல்லவே அடித்தாளேவாய்மேலே
அப்படிகோபமாய் வரும்போது அல்லியரும்
சேராமபுகானகத்தில் சென்றோம்தளத்தோடே
தண்டுதளங்களெல்லாந் தாபரித்துயாமிருந்தோம்
இப்படியாக இருக்குமந்தவேளையிலே
சேராம்புகானகத்தில் சேவிக்கும்வேடர்வந்தார்
அந்தவேடுவரையப்போது வேந்தர்கள்தான்பிடித்து
மாதுயிருக்கும் மயிலணையாள்கூடாரம்
கொண்டுவந்துவிட்டார்கள் கொற்றவரும்வேடவரை
மதுரைநகராளுமெங்கள் மாதுநல்லாளப்போது
நீங்களார்நானுமென்று அல்லியருங்கேட்கலுற்றாள்
சேராம்புகானகம் சேவிக்கும்வேடரென்றார்
இது-யாருடையசீமையென்று அருங்கிளியாள்கேட்டாளே
பவளக்கொடியாளின் பைங்கிளியாள்சீமையிது
என்றந்தவேடுவரும் ஏந்திழைக்குச்சொன்னார்கள்
அப்போதுமாதுநல்லா ளல்லியருஞ்சொல்லலுற்றாள்
மாதுநல்லகன்னியற்கு மணமாலையாச்சுதடா
பதினாறுநாளாச்சு பைங்கொடியைமாலையிட்டு
ஒக்கவொருவ னுயிர்த்தோழனாவந்தான்
அவருக்குமணமாலை ஆச்சுது அம்மாளே
என்றதுகேட்டாள் இளங்கொடியும்அல்லியம்மாள்
கதம்பியெழுந்திருந்தாள் காட்டானைபோலாக
அப்படியாயென்று ஆரணங்குமப்போது
கோபந்தணலாகி கொம்பனையுந்தானிருந்தாள்
கதண்டுகுளவிகளும் காவலரைத்தானுமப்போ
யானைகுதிரைகளை அடல்பெரியசேனையெல்லாம்
கொட்டிமடித்தது கொற்றவரேல்லாரையுந்தான்
மதுரைத்துரைச்சி மைந்தனைத்தப்பவிட்டு
அத்தண்டசேனையெல்லா மங்கேமடிந்தார்கள்
செத்துமடிந்ததை செல்வதியாள்தான்பார்த்து
ஈஸ்வரியேபார்வதியே என்றுபுலம்பலுற்றார்
வெத்தவிசாமாய் மெல்லியருந்தாமிருந்தார்
சேராம்புரசாவின் தோட்டிஒருவனன்வந்தான்
நீ-எந்தவூர்போகின்றீர் என்றாளிளங்கொடியும்
குருநாடுசீமைக்குக் கொற்றவாலைகொண்டு
மதுரைக்குத்தாங்கள்வந்து மன்னவரேயிப்போது
பவளத்தேர்கொப்பனிட்டு கொண்டுவாரேனென் றுசொல்லி
மூன் றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
பதினாறுநாளாச்சு பாரத்தர்வரவில்லையென்று
எங்கள்மாதுநல்லாளல்லியரும் வந்தாள்படையெடுத்து

அடித்துப்புரண்டழுதாள் அன்னநடையாளும்
என்னசெய்வேனென்று ஏங்கியழுதாளே
குருநாடுசீமையிலே கொற்றவருந்தேவியரும்
மாண்டயிடத்துக்கு மன்னவர்களெல்லோரும்
எல்லோரும்வந்தார்கள் இரைச்சலிட்டுதானழுதார்
அதனாலேயிங்குவந்தோம் ஐயாவேயென்றுசொன்னான்
பாலன்சொன்னவார்த்தையெல்லாம் பார்த்திபன்கேட்டானே
மெத்தஅதிசயமாய் வேந்தர்கள்தாமிருந்தார்
அப்போதுபெண்களெல்லா மதிகமனமகிழ்ந்து
அர்ச்சுனன்தேவிமா ரெல்லோருந்தானெழுந்தார்
தருமரிடபாதஞ் சாஷ்டாங்கந்தான்பணிந்தார்
தெண்டனிட்டமர்தர்களை சீர்பெறவேவாழ்த்தினார்
தம்பிமார்வந்து தாளிணையைப்போற்றிசெய்தார்
கண்டுநெளிகூர்ந்தார் காண்டீபனருச்சுனனை
அப்போது அல்லியரு மர்ச்சுனரைத்தான்பார்த்து
பொங்கிமனங்குளிர்ந்து பொற்கொடியாளப்போது
மூன்றுநாளாறபொழுதில் வாரேனென்றீர்சுந்தரரே
பதினாறுநாளாகப் பார்த்தரிருந்ததினால்
கண்டுதளபெடுத்து தார்குழலும்வந்தேனிங்கே
காண்டீபனருச்சுனரே காளையரேயும்மையுந்தான்
அலைகடல்பள்ளிகொள்ளும் ஆயனுந்தானறிந்து
என்னசெய்வாரோ என்றுமனதிலெண்ணி
இவ்விதம்பண்ணினால் இளங்கொடியுமேதுசெய்வாள்
என்று-மாயவனார்செய்த மயக்கமிதுவென்றிருந்தேன்
அப்போது-எல்லவருங்கூடியே யிருக்குமந்தவேளையிலே
சேராம்புராசாக்கள் எல்லோருந்தானெழுந்து
தர்மரைத்தான்வணங்கி சாஷ்டாங்கதெண்டனிட்டு
எங்கள்-வளம்பெரியபட்டணத்தை வண்மையாய்பார்க்க
எல்லவரும்வாருங்கள் எங்கள்மேல்தயவுவைத்து
சாஷ்டாங்கமாகவே தெண்டனிட்டராசாக்கள்

## தர்மர்முதல் அனைவரும் அரண்மனைக்குப்போகுதல்.

அந்தப்பட்டணத்தைநோக்கி பரிவுடனே தான்வந்தார்
அப்போதுதர்மதுரை அதிகமனமகிழ்ந்து
எல்லவர்களுங்கூடி ஏகரித்துதானடந்தார்
பேராசர்களெல்லோர்கள் பொங்கிமனங்குளிர்ந்து
போனார்கள்நால்வருமாய் பொற்கொடியாளரண்மனைக்கு
பாராளுந்தருமருக்கு பவளக்கொடியாளும்
மாணிக்கசிங்காசனம் மன்னருக்குசோடித்து
குருநாடுஆளுகிற கொற்றவரேயிருமென்றாள்
வெற்றிமதயானை வீமதுரைராசருக்கு
நவரத்தினசிங்காசனம் நலமுடனேசோடித்து

இதன்மேலிருவென்று ரிளங்கொடியுமப்போது
காமக்கொடியுடைய நதலனவன்றனக்கு
சிங்காசனங்களிட்டு வீற்றிரென்றுரப்போது
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவராசருக்கு
பொன்னிழைத்துவைத்த சிங்காதனம்போட்டு
இதன்மேலிருவென்று ரிளங்கொடியாளப்போது
புலந்திரராசனுக்குப் போட்டார்சிங்காதனங்கள்
எடுத்துமவள்வைத்து இருமைபாதம்பியரே
என்றுமவள்சொல்லி இளங்கொடியுமப்போது
விசையனுர்தேவியற்கு விதவிதமாய்வார்த்தைசொல்லி
அவரவர்க்குத்தக்கதோ ராசனங்கள்போட்டுவைத்தார்
அப்போது-தேவிமாரெல்லாருந் திறமுடனே தானிருந்தார்
பார்த்திபனருச்சுனனும் பள்ளியறையுட்புகுந்து
அப்போது-பாருளுந் தருமதுரை பார்த்துமனமகிழ்ந்து
இந்தமாதுகல்லகன்னியவள் மரியாதையுள்ளவள்காண்
இறப்புக்கும்பிறப்புக்கும் இனியொருபெண்வேணுமோ
என்றுமனங்குளிர்ந்து இருந்தார்சந்தோஷமாக
மதுரைத்துரைச்சியரும் மனம்பொருந்தியல்லியரும்
மாநிலுடபட்டணத்தில் மகாசேனையுள்ளதெல்லாம்
அரண்மனையிருபுறமும் ஆஸ்தானமண்டபமும்
பள்ளியறையெங்கும் பார்க்கமுடிபோகவில்லை
அந்தப்-பவளப்புதுமைகளைப் பார்த்தாளே அல்லியரும்
இடம்பெரியவாசலது எழுநூறுகாதவழி
தூணுக்குத்தூணுமங்கே தொண்ணூறுகாதவழி
ஆயிரங்காதவழி அழகானவாசலது
பவளக்கால்சொப்பனிட்டு பாங்காயலங்கரித்து
பொற்றூணும்கற்றூணும் குங்குமகற்றூணும்
தூணுக்குத்தூணுமங்கே தூண்டாவிளக்கெரிய
குளிர்ந்ததங்கத்தூணும் குங்குமகற்றூணும்
தூணுக்குத்தூணுமங்கே தூண்டாவிளக்கெரிய
இட்டிருக்குமாசனமு மேன்மணிச்சிங்காசனமும்
வாடாததாமரையும் வந்துநிழல்காட்ட
முத்துமாகதமும் முழுபவளத்தூணுமங்கே
தங்கத்தால்பொம்மைகளும் தனிவயிரமாலைகளும்
வாழைகமுகுகளும் வண்ணபலாச்சோலைகளும்
சேரவேநாட்டி செம்பவளத்தூணிருத்தி
நின்றவிடந்தோறும் நிலைதோறும்சப்பரமும்
கண்டவிடந்தோறும் கண்ணாடிமாலைகளும்
காடைவிளக்குகளுங் கைவிளக்குதேர்விளக்கும்
தாமமுடியாளுக்குச் சம்பாகல்விளக்கும்
பவளப்புதுமைதனை பார்க்கமுடியாது

கண்டவிடந்தோறும் கனத்தபவளமாலை
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகிக்கு
எங்கும்பவளமா யிருக்குதாண்மனைக்குள்
அப்போது-பங்கயஞ்சேர்கண்ணாள் பைங்கிளியாள்பார்க்கையிலே
அந்தப்-பவளநிறமும் பாரித்தகண்ணழகும்
சோதியழகுமவள் துய்யமுகத்தழகும்
அவள்-வடிவழகுமொப்பனையும் வையகத்தில்கண்டதில்லை
இந்த-மாதினிடஉபசாரணை மரியாதைதான்பார்த்து
மதுரைதுரையல்லியரும் மனங்குளிர்ந்தப்போது
பவளக்கொடியாளை பைங்கிளியைத்தான்பார்த்து
வாருமிங்கேவம்மாவென்று வார்த்தைமிகப்பேசி
பாஞ்சாலன்பெற்றெடுத்த பைங்கிளியாள்துரோபதையும்
அலைகடலிற்பள்ளிகொள்ளும் அச்சுதனார்தங்கையரும்
கொம்பனைமாரெல்லோரும் கூடிவிளையாடினார்கள்
மாமியார்குந்தியம்மாள் மருமகளைத்தான்பார்த்து
மார்போடேதானணைத்து மருமகளைமுத்தமிட்டு
என்-அறிவுள்ளநாயகமே அழகுமுடிபொறுத்து
என்று-திருஷ்டிகழித்தார்கள் தேன்மொழிக்கப்போது
எட்டுநாளங்கே யிருந்தார்கள்யாவருமாய்
விருந்துகள்பண்ணியே வெகுமானந்தான்கொடுத்து
பவழத்தாற்பல்லக்கு பாரித்தார்யாவருக்கும்

பவளக்கொடியாள் புலந்திரனுக்குச்சொல்வது.

பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
மைந்தன்புலந்திரனை மடிமேலெடுத்துவைத்து
என்-கண்ணான கண்மணியே காண்டீபன்தன்மகனே
குருநாட்டையாளுகிற கொற்றவர்கள்தன்மகனே
தங்கமுடிபெற்ற தனஞ்சயனார்புத்திரனே
நவரத்தினபொன்முடியே நாயகியாள்தன்மகனே
என்று-கண்ணோடேதானணைத்து கனிவாயைமுத்தமிட்டு
வாரியெடுத்து மடிமீதில்வைத்துக்கொண்டு
மதுரைநாடாளுகிற மாதுதுரைமகனே
என்று-பவளக்கொடியாளும் பைங்கிளியாளேதுசொல்வாள்
என்-தங்கக்களஞ்சியமே தார்வேந்தர்தம்பியரே
உந்தனைத்தொட்டு உண்மைபெறலாச்சுதையா
நீபவளத்தேர்வேண்டியே பத்தாவைக்கேட்டதினால்
எம்முடன்-பத்தாவுமிங்குவந்து பாலித்தார்கானகத்தில்
நான்-கானகத்தில்வேட்டைவந்தேன் கண்டுவிட்டார்பார்த்தாவர்
அங்கிருந்ததோழனும் அழுகிறதைதான்கேட்டு
என்தாதியரை-போய்வாருமென்று சொன்னேனேஐயாவே

13

தாதியவள்பார்த்து தார்குழலாளோடிவந்து
ஆரோதெரியாது அரசர்படைவென்றவர்போல்
காணுகுதுஎன்தாயே கடுகெனவேபோகவேணும்
என்றதுசொல்லவே பேதிநேன் தண்டிகைமேல்
அப்போதுபோயிரங்கி அவரைநான்பார்த்தேனப்பா
என்-மார்பின்சரப்பளியை வாங்கியேநான்போட்டேன்
தாதியரைக்கட்டுமென்று தண்டிகைமேல்வந்துவிட்டேன்
கட்டியேதாதியரும் கடிகியேயோடிவந்தாள்
அப்போ-மார்பின்சரப்பளியை வாங்கிவரச்சொன்னேனையா
தாதியவள்போய் சரப்பளியைக்கேட்டாக்கால்
தருகிறதில்லையென்றார் தனஞ்சயனாரப்போது
தாதியவள்வந்து தருவதில்லையென்றாளப்பா
அப்போதரண்மனைக்கு வந்துவிட்டேனப்பானான்
கொலுமுகச்சாவடியில் கொம்பனையுந்தானிருந்தேன்
அன்னவடிவெடுத்து வந்தார்கொலுமுகத்தில்
அவர்-ஆடலும்பாடலும் அதிசயத்தைத்தான்பார்த்து
அவர்—கூவுகிறவோசைகளும் குயிலென்றநானிருந்தேன்
நான்-அன்னமென்றசொல்லி அணைத்துபிடித்துவந்து
தாதியரைத்தானழைத்து தையலவள்கைகொடுத்தேன்
கூண்டிலடையுமென்று கொற்றவனேசொன்னேனையா
அப்போது-அன்னவுருமாறி அர்ச்சுனருனரையா
மன்னவனார்ச்சுனனும் மதியைக்குலைத்தாரே
மணமாலைசூட்டினார் மன்னவனே தம்பியென்றாள்
என்பத்தாவின்புத்திரனே பார்வேந்தர்தன்மகனே
குருநாட்டையாளுகிற கொற்றவனார்தருமதுரை
வெற்றிமதயானை வீமதுரைராசர்
நாமக்கொடியுடைய நகுலனவன்றனையும்
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவராசரையும்
ஐவரைப்பெற்றெடுத்த அம்மாவேகுந்தியம்மாள்
மதுரைநாடாளுகிற மாதுநல்லாளல்லியரும்
பாஞ்சாலநாயகியாள் பத்தினியாள்தேவியரும்
மாயரவர்தங்கை மங்கைசுபத்திரையும்
விசயனார்தேவி மெல்லியர்கள்யாவரையும்
என்கண்குளிரப்பார்க்க வந்துதேகண்மணியே
இல்லாமற்போனால் யிவர்களையறியேனையா
என்றவள்சொல்ல என்றவருந்தான்கேட்டு
பொங்கிமனங்குளிர்ந்து பொற்கொடிமாரெல்லோரும்

பவளக்கொடியாள் புலந்திரனுக்கு பவளத்தேர்கொடுத்தது.

பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
பவளத்தேரொன்று பாலனுக்குசொப்பனிட்டு

மெத்தவினோதமாய் வெகுவாயலங்கரித்து
மைந்தர்புலந்திரற்கு வேண்டியதுதான்கொடுத்தாள்
பவளத்தேர்மேலே பாலகனையேற்றிவைத்து
திருஸ்டிகழித்தாளே தேன்மொழியாளப்போது
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
மாமியார்குந்தியம்மாள் மயிலணைக்கப்போது
பாதஞ்சரணமென்று பணிந்தாளே தேன்மொழியும்
மந்தாரக்குந்தியம்மாள் மருமகளைத்தானெடுத்து
வாழ்த்திவிடைகொடுத்து மங்கையருமப்போது
கட்டியணைத்து கனிவாயமுத்தமிட்டு
என்றஞ்சிரஞ்சீவியாய் என்னாளும்வாழ்ந்திருப்பாய்
அப்போது-பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
பாராளுந்தர்மருக்குப் பாதஞ்சரணமென்றாள்
சாஷ்டாங்கமாகத் தையலருந்தான் பணிந்தாள்
வாழ்த்திவிடைகொடுத்தார் வீமதுரைராசாவும்
வெற்றிமதயானை வீமதுரைராசருக்கு
நகுலசகாதேவ நாமமுடிமன்னருக்கு
மைத்துனர்களிருவருக்கும் மாதுசரணமென்றாள்
என்பத்தாவின்தேவிமா ரெல்லவர்க்குஞ்சரணமென்றாள்
தருமாபுரியாளுந் தனஞ்சயனாப்போது
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாட்கு
வேண்டியவுடுப்புகளும் வேணதுயிலாடைகளும்
பொன்னாலலங்கரித்த பொற்பவளதண்டிகையும்
சந்தோஷமாகத் தையலர்க்குத்தான்கொடுத்தார்
என்னாளுஞ்சுகமா யிருந்தரசாளுமென்றார்
அப்போவிடைகொடுத்தார் ஐவருமங்கிருந்தார்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
விசயரந்த அர்ச்சுனரை மெல்லியருந்தான்பார்த்து
குருநாடுசீமைக்கு கொற்றவரேபோரீரோ
பதினாறுதன்வருடம் பாவிசிறையிருந்தேன்
ஒன்றுமறியாமல் உத்தமியுநானிருந்தேன்
கோடானகோடியுண்டு கொம்பனையைகேட்டவர்கள்
மாலையிடவந்தவர்கள் மட்டுமிதயில்லையா
ஆரையுந்தீண்டேனென்று அருஞ்சிறைநானிருந்தேன்
ஏரெடுத்துப்பார்த்தவர்கள் ஏனென்றுகேட்டதில்லை
ஆறுமில்லைவையகத்தில் அர்ச்சுனரேயென்றுசொல்லி
மணமாலையிட்டீரே மாயவர்தன்னருளால்
பதினாறுநாளையிலே பத்தாவேளைத்தனையும்
செய்யாதகோலமெல்லாம் செய்துவிட்டீரருச்சுனரே
குருநாடுசீமைக்கு கொற்றவரேபோரீரோ

என்றசொல்லிகன்னியரு மேங்கியழுகிறாள்
பொங்கியழுதமே பொற்கொடியாளப்போது
மயங்கியேதானழுதாள் மயிலனையாளப்போது
அவளைப்-பார்த்தாரருச்சுனரும் பாரமுடியாளை
மயங்கியழுகிறதை மன்னவருந்தான்பார்த்து
பொங்கியழுகிறதை போர்விசயன்தானறிந்து
கட்டயணைத்து கனிவாயைமுத்தமிட்டு
மாணிக்கத்துப்பட்டியால் மாதினிடகண் துடைத்து
நீ-அழவேண்டிகாரியமேன் அன்னப்பசுங்கிளியே
குருநாடுசீமைக்குக் கொற்றவனார்தம்முடனே
நானோடுறவாய் நயநமேநான்போயி
அங்கே-யெல்லோருஞ்சேர்ந்து இருக்குமந்தவேளையிலே
நாளும்வருவேன் நாயகமேயென்றசொல்லி
நான்-தங்குவேனோபூமியிலே தரிப்பேனோஅங்கேநான்
என்-சோதிமணிவிளக்கே துய்யவிளம்பிறையே
தேனேமணிவிளக்கே தெள்ளுபணிபாளே
உன்னைப்பிரிந்துநான் யிருப்பேனோபூமியிலே
கடுகவருகிறண்டி என்கட்டழகிநாயகமே
நான்-ஓடிவருவேண்டி ஒருநொடிக்குள்ளாக
கால்நடவாமல் காற்றாய்வருவேண்டி
என்றதுசொல்லவே இளங்கொடிக்கு அர்ச்சுனனும்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
அப்போதுஏதுசொல்வாள் அன்னபசுங்கிளியும்
நான்-தங்கியிருப்பேனோ தரிப்பேனோபூமியிலே
நான்-என்னசொல்வேனரிள்விசயா என்றழுதுக்கொண்டிருந்தாள்
இந்தக்கருத்துக்கோ என்னைவந்துமாலையிட்டீர்
இப்படியென்றிருந்தால் இணங்கேனேமன்னவனே
எனக்கென்னகெதியாச்சு யென்றேயழுதுகொண்டு
ஈஸ்வரரேபார்வதியே எனக்கென்னவிதிவிதித்தாய்
அண்டமுலகளந்த ஆயர்பெருமாளே
எல்லாருங்கூடியே யிருந்தீரேயெந்தனுக்கு
இந்தகருமத்துக் கினியென்னசெய்வேனையா
என்றசொல்லிமாது விளங்கொடியாள்தானழவே
காண்டீபனர்ச்சுனனும் காளையவனப்போது
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
தங்கமுடிதரித்த தனஞ்சயனாயகமே
நான்-இங்கேயிருப்பேண்டி விளங்கொடிநாயகமே
எனக்கும்பெரியவர் இயலானவீமரவர்
அவருக்குமூத்தவர் அழநான தருமலிங்கம்
இவர்கள்-போகட்டென்றநாமிருந்தால் பேச்சுக்கிடமல்லவா

பொறுக்கமுடிகூடாது புத்தியுள்ளநாயகமே
அடி - அதனாலேகண்ணே அவரோடுறவாக
போய்வாரேன்பெண்ணே என்றானிளவரசன்
அப்போதுமாது அருங்கிளியுமேதுரைப்பாள்
கடுகவருவேனென்று சட்டமுகாயெந்தனுக்கு
எனக்குஒருநிச்சயங்கள் செய்துகொடுமென்றாள்
இல்லாமற்போனாலே இனிநம்பேனென்றுசொன்னாள்
காண்டீபனருச்சுனனுங் காளையவனேதுசொல்வார்
தர்மர்மேலாணையிட்டு தையலர்க்குதநான்கொடுத்தான்
இனியானால்நம்புவையோ ஏலப்பசுங்கிளியே
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
மனதுகுழைந்தாளே மாதுநல்லாள்கன்னியரும்
அர்ச்சுனனுமப்போது அதிகமனம்பூரித்து
மாதுகையில்விடைபெற்று மன்னநடக்கலுற்றான்
அங்கேவிடைபெற்று ஐவருந்தானடந்தார்
மதுரைதிசைநோக்கி வருகிறார்துரைகளெல்லாம்

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அல்லியுட பாளயத்தை யெழுப்பிவிடுதல்.

அண்டமுலகளந்த ஆயர்பெருமாளும்
மதுரைத்துரைச்சி மகாசேனையுள்ளதெல்லாம்
கதண்டுகுளவிகள் கொட்டிமடிந்தவரை
சேனைபரிவாரம் சேனைகளுள்ளதெல்லாம்
யானைகுதிரைகளை அத்தண்டசேனையெல்லாம்
தட்டியெழுப்பிவிட்டார் தனஞ்செயனாரெம்பெருமாள்
தூங்கிவிழித்தாற்போல் துரைமார்கள்தானெழுந்தார்

## தருமர்முதலியயாவரும் அவரவர்களிடஞ்செல்லுதல்.

எழுப்பிவிட்டமாயவனா ரேகினாரப்போது
தருமாபுரியாளும் தருமதுரையெல்லோரும்
குந்தியம்மாள்தன்னுடனே தொற்றவருந்தேவியரும்
எல்லவருங்கூடியே ஏகரித்துத்தானடந்தார்
அல்லிநல்லாள்பாளையத்தில் வந்தார்களப்போது
செத்துமடிந்ததொரு சேனைதனெல்லவரும்
எப்போதும்போல யிருக்கவேகண்டார்கள்
மதுரைத்துரைச்சி மனங்குளிர்ந்தாளப்போது
பாளையங்களுள்ளதெல்லாம் பயணங்களாச்சுதப்பா
ஆனை நதிரைகளும் ஆள்பெரியசேனைகளும்
சேனைபவுத்துகளும் சேனைகளெல்லவரும்

கொடிகள்கொடிச்சிலை குடைகளுஞ்சூழ்ந்துவர
யானைகுதிரையின்மேல் அடிபடுதுடங்காவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைகிளம்புகுது
எக்காளஞ்சின்னம் எழில்பெறமேலனாதவனும்
பூரிகைடமாரம் பூமியதிருதங்கே
அல்லிப்பெருமாளும் அழகுபுலந்திரனும்
பாஞ்சாலநாயகியாள் பத்தினியாள் துரோபதையும்
மந்தாரக்குந்தியம்மாள் மாமியாருந்தான்கூட
ஆனையம்பாரிமேல் அனைவோருந்தானடந்தார்
பார்க்கமுடிபோகவில்லை பைங்கொடியாள்ராணுவங்கள்
காடுசெடிகள் கடுந்தணலாகுதங்கே
கல்லுகளும்முள்ளுகளும் கடுகிபொடியாகுதங்கே
கருந்தூளுஞ்செந்தூளுங் கதிரோனைக்கப்புதங்கே
பாளையம்போகிற அதிசயத்தைத்தான்பார்த்து
காண்டீபனருச்சுனனும் காளையவன் தானினைந்து
இப்படிக்கு அதிசயமாய் இயன்வரக்காரியமேன்
இது-நமக்காகிவந்து நம்முயிரைக்கொல்லவல்லோ
மாயனபெருமாளும் மகாதேவர் தருமத்தில்
ஆயன்பெருமாள் அருளாளர்கிருபையினால்
நாம்-தப்பிப்பிழைத்தோம் தார்வேந்தர் தருமத்தால்
பாராளுந்தருமதுரை பாக்கியத்தால்வந்தோம்
இளங்கொடியாள்மாதருக்கு எதிரொருவரில்லையே
தப்பாமல்தலையறுப்பாள் தாமமுடியாளும்
பொல்லாத அல்லியவள் போருக்கும்வல்லவள்நாண்
மைத்தன்மேலாணை மறந்தபாவியென்றுசொல்லி
சத்தியந்தப்பினார் தார்வேந்தரென்றுசொல்லி
கழுமரத்திலேற்றி கடுஞ்சிறையில்வைப்பாளே
என்றுமனதிலுள்ளே எண்ணினானர்ச்சுனனும்
அப்போ-எல்லோருங்கூடியே ஏகரித்துத்தானடந்தார்
அந்த-மதுராபுரியில் வாழ்வரசிபட்டணத்தில்
போனார்களவருவாய் பொற்கொடியாளரண்மனைக்கு
அர்ச்சுனனார்தேவிமார் எல்லோரும்போய்நுழைந்தார்
இந்தப்பாராளுந்தர்மருக்கு மற்றுமுள்ளமன்னவர்க்கும்
சிங்காதனங்கள் சோடித்தாளப்போது
குருநாட்டையாள் தருமர் கூடவேதானிருந்தார்
ஐவரையும்பெற்றெடுத்த பூரணக்குந்தியம்மாள்
பாஞ்சாலிநாயகியாள் பத்தினித்துரோபதையும்
மற்றுமுதல்தேவியெல்லாம் வாருமென்றுதானழைத்தாள்
அவரவர்க்குஆசனங்கள் போட்டாளேயல்லியரும்
அப்போது-மூன்றுநாளங்கே முடிமன்னர்தாமிருந்தார்

விருந்தமுதுசெய்து மெத்தவுபசரித்தாள்
எல்லவர்க்கும்வெவ்வேருய் ஈந்தாள்வெகுமானம்
வெகுமானம்பெற்று விடைபெற்றுதானடந்தார்
அப்போது-பாராளுந்தருமதுரை பாலநனைத்தானெடுத்து
கட்டியணைத்து கனிவாயைமுத்தமிட்டு
நான்-போய்வாரேன்என்கண்ணே பொன்னின்புலந்திரனே
என்றுசொல்லிதருமர் இருமென்றாரப்போது
வெற்றிமதயானை வீமதுரைராசாவும்
என்-அப்பாபுலந்திரனே அல்லிமகனுரே
என்-கட்டிக்கரும்பே காளைபுலந்திரனே
போய்வாரேன்கண்ணே புலந்திரராசாவே
என்றுசொல்லிவீமர் இருமென்றாரப்போது
நாமக்கொடியுடைய நகுலரவர்பார்த்து
தம்பிபுலந்திரனே தார்வேந்தர்தம்பியரே
குருநாடுசீமைக்கு கொற்றவனேபோய்வாரேன்
என்றவர்சொல்லி இருமென்றாரப்போது
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவன்தான்பார்த்து
தங்கமணியே தாவேந்தாபுலந்திரனே
குருநாடுசீமைக்கு கொற்றவனேபோய்வாரேன்
என்றவர்சொல்லி இருமென்றாரப்போது
மந்தாரக்குந்தியம்மாள் மயிலனையாளப்போது
புலந்திரனைத்தானெடுத்துப் பெருக்கமனமகிழ்ந்து
ஐவர்கலிதீர்த்த என்னப்பாபுலந்திரனே
குருநாட்டையாளுகிற கொற்றவர்கள்தன்னுடனே
நான்-போய்வாரேனென்று புலந்திரனைமுத்தமிட்டு
இருங்காணுமன்னவரே என்றுசொன்னாள்குந்தியம்மாள்
அர்ச்சுனனார்தேவிமார் எல்லாருமப்போது
அப்பாபுலந்திரனே அதிரூபசித்திரமே
நாங்கள்-யாவரும்போய்வாரோம் என்றார்களப்போது
என்றுசொன்னாரப்போது இயலானதேவிமார்கள்
காண்டீபனருச்சுனனும் [illegible]யவனப்போது
மைந்தன்புலந்திரனை மன்னவனுந்தான்பார்த்து
போய்வ்வாரேனென்றான் போர்விஜயராசாவும்
போராஞ்சாமல் [illegible]ன் புலந்திரனுங்கூறுவான்
அண்ணாவேநீர்போனால் வாரதில்லையிப்போவே

போனால்வருவதில்லை என்றான்புலந்திரனும்
ஆனாலழகுமன்னன் அர்ச்சுனனுங்கூறுவான்
இன்னாளும்போலே இனியிருக்கமாட்டேனப்பா
கடுகவருவேனப்பா காளைபுலந்திரனே
நம்புவேனோவென்று நவின்றான புலந்திரனும்
நம்பியிருவென்று நாயகனுஞ்சொல்லினான்
அல்லியரைப்பார்த்து அர்ச்சுனனுமேதுசொல்வான்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகமே
குருநாடுசீமைக்குக் கொம்பனையேபோய்வாறேன்
அப்போது அல்லியரும் ஆரணங்குதான்மயங்கி
கண்ணீர்சொரியவிட்டாள் கட்டழகியப்போது
வேண்டாங்காண்மாதே விசாரப்படவேண்டாம்
மெய்யாய்வருகிறேன் மெல்லியரேநம்பென்றான்
இந்நாளும்மே[illegible]லை இராதேநீயங்கேயென்று
போய்வாருமென்றுசொல்லி பொற்கொடியுந்தெண்டனிட்டாள்
மாதுவிடைகொடுக்க வாள்விஜயன் தாமெழுந்து
தருமரும்வீமரும் தானடந்தார்பொட்டெனவே
காடுசெடிதாண்டி கரியமலைதாண்டி
பொல்லாவனங்கடந்து போய்ச்சேர்ந்தார்குருநாடு
அவரவர்களாசனத்தில் அமர்ந்தார்கள்பஞ்சவர்கள்
இந்தக்கதைதன்னை இவ்வுலகில்கேட்டவர்கள்
கேட்டோர்கிளைதழைத்துக் கீர்த்தியுடன்வாழ்ந
ஆல்போல்தழைத்து அருகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திருப்பார்

வஞ்சி விருத்தம்.

வாழிவாழிவானவர் வாழிவாழிமாமறை
வாழி வாழிமாதவர் வாழிவாழிவையமே.

பவளக்கொடிமாலை,
முற்றிற்று.

---